# தமிழ் முரசு

ஆசிரியர்: ம. பொ. சிவஞானம்

தமிழ் நாடு வாழ்க



1950 மே

விலை 4 அணா

மானம் மரியாதை கற்பு

எல்லாவற்றிற்கும் விலையா

இந்தப் பணம்?

குமுறிய உள்ளத்திலிருந்து
எழும் கேள்வி



ஏவி எம்
புரொடக்‌ஷன்ஸ்

# வாழ்க்கை

இந்த வருஷத்தின் வெற்றிகரமான திரை ஓவியம்

இப்போது மகோன்னத வெற்றியுடன்
50 நகரங்களில்
நடைபெறுகிறது

AVM
புரொடக்‌ஷன்ஸ்

G.H. RAO

வெற்றி எட்டுத் திக்கும் எட்டக் கொட்டு முரசே!
வீரர் என்றும் வாழ்க என்று கொட்டு முரசே!




## பொருளடக்கம்

●

தமிழ் முரசு

திருவள்ளுவராண்டு 1981 சித்திரை

# அடுத்தபடி என்ன?

கடந்த ஜனவரி 26-ந் தேதியன்றே ஆந்திர அரசு அமைந்து விடும் என்று ஆந்திரர்கள் எதிர்பார்த்தனர். ஆனால், பிரகாசத்தின் சண்டித்தனமும், மேலிடத்தவரின் சஞ்சல புத்தியும் பிரிவினையைத் தடுத்து விட்டன.

ஆந்திரம் பிரியாததைக் கண்டு நாம் சோர்வடையவில்லை. ஏனெனில், பிரிவினைக்கமிட்டி வகுத்த திட்டத்தில், தமிழ் இனத்தவரின் உரிமைகளைப் பறிக்கும்—உடைமையைக் கவரும் கொடுமைகள் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தன. அத்திட்டப்படி ஆந்திரம் பிரிக்கப்பட்டிருந்தால்,

சென்னை அரசாங்க சொத்துக்கள் ஆந்திரத்துக்கும் ஆந்திர மல்லாத சென்னை மாகாணத்துக்குமாகப் பங்கு போடப்பட்டிருக்கும்.

பிரிவினைக்குப் பிறகும் சென்னை நகரில், ஆந்திர அரசாங்க இலாகாக்கள் குடிக்கூலி கொடாமலே கூடாரமடித்திருக்கும்.

அரசாங்க இருப்பு நிதியிலிருந்து, ஆந்திர அரசு அமைவதற்கான ஆரம்பவேலைகளுக்காக ஒருகோடி ரூபாய் 'தானம்' வழங்கப்பட்டிருக்கும்.

திருப்பதிக்குத் தெற்கேயுள்ள சுமார் 4000 சதுர மைல்கள் கொண்ட தமிழ்த் தாலூக்காக்கள் ஆந்திர நாட்டோடு சேர்க்கப்பட்டிருக்கும்.

> நிறுவப்படவிருந்த ஆந்திர அரசின் அதிகாரப் பதவிகளில் தமிழர்கள் அமர்த்தப்பட மாட்டார்கள். ஆனல், தமிழ் நாட்டில் பதவி வகிக்கும் ஆந்திரர்கள், விரும்பினல் இங்கேயே இருந்து வர தடையொன்று மிருக்காது.

போரில் தோல்வியுற்ற நாட்டின் மீது, வெற்றிபெற்ற நாட்டினரால் திணிக்கப்படும் எந்தத் திட்டமுங்கூட இதைவிட மோசமாக இருக்க முடியாதென்பது திண்ணம்.

பம்பாயிலிருந்து சிந்து நாடும், கல்கத்தாவிலிருந்து ஒரிசா, அசாம் நாடுகளும் பிரிக்கப்பட்டபோது அரசாங்க சொத்துக்கள் பங்கு போடப்படவில்லை. மற்றும், அங்கெல்லாம் புதிய அரசாங்கங்களின் ஆரம்ப செலவுகளுக்காக மத்திய அரசாங்கத்தார் நிதி வழங்கினரேயன்றி மாகாணப பொதுநிதியிலிருந்து 'தானம்' வழங்கப்படவில்லை. மேலும், வடக்கே பிரிக்கப்பட்ட மாகாணங்கள், அரசாங்க இலாகாக்கள் அனைத்தையும் தனது சொந்த தலைநகரிலேயே அமைத்துக் கொண்டனவேயன்றி, இரவலுக்கு இடந்தேடவில்லை.

சொத்துப் பிரிவினை ஒப்புக் கொண்ட விடத்தும், நியாயமான வகையில் பிரித்துக் கொடுக்க பிரிவினைக் கமிட்டி வழி காணவில்லை. சென்னை மாகாணத்தின் மொத்த வருமானத்தில் ஆந்திர ஜில்லாக்களின் வருமானம் எத்தனை சதவிகிதமோ, அத்தனை சத விகிதத்திற்குத் தான் சொத்துப் பிரிவினையில் பங்கு தரவேண்டும். ஆனல், பிரிவினைக் கமிட்டி இதற்கு எதிர்மாருக, ஜனத்தொகை விகிதப்படி சொத்தைப் பிரிக்க சம்மதித்தது. இதனல் 22 சத விகிதம் நஷ்ட ஈடு பெற வேண்டிய ஆந்திர நாடு 39 சதவிகிதம் பங்கு பெருவதற்கு சந்தர்ப்பம் கிடைத்தது. இதனல் பின்னெரு காலத்தில், கேரளமும் கன்னடமும் பிரியும்போது அவற்றிற்கும் ஜனத்தொகைக் கணக்கின் மீதே சொத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்படும்.

இன்று ஆந்திர ஜில்லாவாகக் கருதப்படும் பெல்லாரியை, கன்னடர் வசிக்கும் தாலுகாக்களை கன்னடருக்கென்றும், ஆந்திரர் வசிக்கும் மூன்று தாலுகாக்களை ஆந்திருக்கென்றும் பிரித்த பிறகே ஆந்திர மாகாணம்

அமைக்கப்பட வேண்டும் என்று முடி செய்த பிரிவினைக் கமிட்டி சித்தூர் ஜில்லா தமிழர்களின் கோரிக்கைக்கு மருக, அவர்கள் வாழும் தாலுக்காக்களை ஆந்திரத்தோடு சேர்க்ககத் துணிந்த அநீதியை என்னென்பது?

இவ்வாறு அநீதிகளையே அடிப்படையாகக் கொண்ட பிரிவினைக்கமிட்டியின் திட்டப்படி ஆந்திரம் பிரிக்கப்பட்டிருக்குமானல், தமிழகத்தின் தலைநகரில் ஆந்திரர் - தமிழர் தகராறு வளர்ந்துவிட் டிருக்கும். ஆந்திரம், கேரளம், கன்னடம் ஆகிய மூன்றும் பிரிக்கப்பட்ட பிறகு அந்த நாடுகளுக்குக் கொள்ளை கொடுத்ததன் விளைவாக தமிழகம் மீள முடியாத கடன் சுமையில் ஆழ்த்தப்பட்டிருக்கும்.

எனவே, இந்த நிலையில் ஆந்திரம் பிரிக்கப்படாமல் போனது குறித்து தமிழரசுக் கழகத்தார் வருந்தவில்லை. இனி, ஆந்திரமோ அல்லது கேரள, கன்னட நாடுகளோ சென்னை மாகாணத்தி லிருந்து பிரிக்கப்படும் போது முன்னர் பிரிவினைக் கமிட்டி வகுத்த திட்டத்தை அடிப்படையாகக் கொள்ளக்கூடாது. ஜனவரி 26-ல் எப்படியும் ஆந்திரத்தைப் பிரித்துத் தொலைக்க வேண்டும் என்ற அவசரத்தாலேயே தமிழருக்கு அநீதி இழைக்கும் ஒரு திட்டத்தை பிரிவினைக் கமிட்டியிலிருந்த தமிழர்கள் அங்கீகரிக்க வேண்டியதாயிற்று. இப்போது பிரிவினை தள்ளிப் போடப்பட்டு விட்டதால் பிரிவினைக் கமிட்டியின் திட்டங்கள் முற்றும் ரத்தாகி விட்டதாகவே கருத வேண்டும்.

மேலிடத்தாரின் போக்கைக் கவனித்தால் மொழிவாரி பிரிவினையை அவர்கள் விரும்புவதாகத் தெரியவில்லை. ஆந்திரர்களின் கட்டுப்பாடான கிளர்ச்சி காரணமாகவே, அவர்கள் ஆந்திரப் பிரிவினையை மட்டும் அரை மனதுடன் அங்கீகரித்தார்கள். பிரிவினை காலவரம்பின்றி தள்ளிப் போடப்பட்டு விட்டதால், ஆந்திரர்களின் கிளர்ச்சி ஓரளவு அடங்கி விட்டதென்றே கூற வேண்டும். ஜனவரி 26-ல் ஆந்திரம் பிரிக்கப்பட்டுவிடும் என்ற நம்பிக்கையின் பேரில் கன்னட நாட்டார் மேலிடத்தாரோடு 'ஊடற்போர்' துவக்கினர். ஐக்கிய கன்னடம் அமைப்பதற்கு மேலிடத்தார் அவசரம் காட்டாததைக் கண்டித்து, கன்னடர்கள் எங்கெல்லாம் பதவி வகித்தனரோ, அந்தப் பதவிக்ளிலிருந்தெல்லாம் வெளியேறினர். ஆனல், காங்கிரஸ் மேலிடம், கட்டுப்பாடு என்ற 'துப்பாக்கியை' நீட்டி கன்னடரின் 'ஊடற் போரை' ஒடுக்கி விட்டது.

இந்த நிலையில், தமிழ் நாட்டினரின் கடமை என்ன? ஆந்திரம் பிரிக்கப்படவில்லை என்பதற்காக தமிழருக்கு தமிழரசு அமைவதற்கில்லை என்ற நிலை தமிழரின் ஆற்றலை அவமதிப்பதாகும். தமிழகத்தைத் தனி நாடாக்க வேண்டும் என்று நாம் கோருவதற்குக் காரணம் என்ன? ஆந்திரர்கள் மீது கொண்ட ஆத்திரமோ, மலையாளிகள் மீது மனக் கசப்போ அல்ல. சுதந்தரமாக வாழவும் சொந்த மொழியாம் செந்தமிழை அரசு மொழியாக்கவுமே நாம் பிரிவினையை வற்புறுத்துகிறோம். ஆகவே, ஆந்திரம் பிரிவதற்கான சூழ்நிலை ஏற்படும்வரை நமது சுதந்தர உணர்ச்சியை அடக்கிக் கொள்ளவேண்டும் என்று கேட்க யாருக்கும் உரிமையில்லை. ஆந்திரம் பிரிந்தாலும் பிரியாவிட்டினும், இன்றுள்ள கதம்ப ஆட்சியிலிருந்து தமிழ் நாட்டைப் பிரித்தேயாக வேண்டும்.

சென்னை மாகாணத்தி லிருந்து தமிழகத்தைப் பிரித்து விடவேண்டுமென்ற கிளர்ச்சியே தமிழரசுக் கழகத்தாரின் அடுத்த முயற்சியாக இருக்கும். இதற்காக தமிழகத் தலைவர்களின் ஒருமிகமான ஆதரவைப் பெறுவதும் கழகத்தினரின் கருத்தென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம. தமிழகத்தை யொட்டியிருந்த ஒரே சமஸ்தானமாகிய புதுக்கோட்டை சென்னை மாகாணத்தில் சேர்க்கப்பட்டுவிட்டது. ஆகவே, தமிழகப் பிரிவினைக்கு சமஸ்தானப் பிரச்னை எதுவும் குறுக்கே நிற்கவில்லை. பிரிவினை பற்றியும், பிரிக்கப்படும் ஆந்திர நாட்டின் தலைநகர் பற்றியும் ஆந்திரர்களுக்குள்ளே அபிப்பிராய பேதம் இருப்பது போல் தமிழர்களிடையே எத்தகைய வேற்றுமையும் இல்லை. தமிழகப் பிரிவினைக்காக இங்குள்ள அரசியல் கட்சிகள் அவசரப் படாவிட்டாலும், பிரிவினையை ஆட்சேபிக்கவில்லை. எனவே, காங்கிரஸ் மூவர்குழுவின் கருத்துப்படி உடனே பிரிப்பதற்குத் தகுதியுள்ள ஒரேநாடு தமிழகந்தான் எனலாம். ஆகவே, இனியும் தாமதம் செய்யாமல் தமிழகத்தைத் தனியரசு நாடாக்க வேண்டும் என்று வற்புறுத்த வேண்டுவது ஒவ்வொரு தமிழருடையவும் கடமையாகும்.

"தமிழ் முரசு" இந்தப் பணியில் தீவிரமாகத் தொண்டுசெய்யும். அச்சகம் இன்மை காரணமாக 'முரசு' இடையே சிறிது அயர்ந்திருக்க நேரிட்டது குறித்து வருந்துகிறோம். இனி, 'முரசு' மாதப் பதிப்பேயன்றி, கழகப் பிரசாரத்திற்கென வாரப் பதிப்பொன்றும் விரைவில் வெளிவரும்.

# வீரபாண்டியனை மறவாதீர்!

இந்திய விடுதலை போர் பற்றிய வரலாற்றை வெளியிட டில்லி அரசாங்கம் தீர்மானித்துள்ளது. செய்திகளைச் சேகரிக்க தனிக் குழு ஒன்றையும் அமைத்து, அந்தக் குழுவினர் கோரும் தகவல்களைக் கொடுத்து உதவுமாறும் மாகாணங்களுக்கு ஆணை அனுப்பியிருக்கிறது. பொதுவாக, இந்த முயற்சி வரவேற்கத் தக்கதே. என்றாலும், இந்த விஷயத்தில் டில்லி அரசாங்கத்தினர் ஒரு தவறான அடிப் படையின் மீது வேலை துவக்க விருப்பதை கண்டிக்காமல் இருப்பதற்கில்லை.

வடக்கே 1857-ல் நிகழ்ந்த சிப்பாய்க் கிளர்ச்சியிலிருந்து 1947 ஆகஸ்ட் 15 வரை நிகழ்ந்துள்ள சம்பவங்களை மட்டுமே தொகுக்க வேண்டுமென்பது டில்லி அரசாங்கத்தினர் கட்டளை. இந்திய விடுதலைப் போரின் ஆரம்ப கட்டம் சிப்பாய்க் கிளர்ச்சிதான் என்பது அவர்கள் கருத்து. ஆனால், உண்மை வரலாறு இதற்கு நேர் மாறானது. 1797 முதல் 1801 வரை சுமார் 4 ஆண்டுகள் தெற்கே வீரபாண்டியக் கட்டபொம்மன் வெள்ளையருக்கு எதிராக நடத்திய புரட்சிதான் இந்திய விடுதலைப் போரின் ஆரம்ப கட்டமாகும். இந்தப் புரட்சிக்கு 60 ஆண்டுகளுக்குப் பிறகுதான், வடக்கே சிப்பாய்கள் புரட்சி நிகழ்ந்தது. ஆகவே, பாஞ்சை வேந்தன் கட்டபொம்மன் நடத்திய வீரம் மிக்க புரட்சியிலிருந்துதான் இந்திய விடுதலைப் போரின் வரலாறு எழுதப்பட வேண்டும்.

உண்மை வரலாறு இதுவாக, டில்லி அரசாங்கத்தினர் சிப்பாய்ப் புரட்சியை விடுதலைப் போரின் முதல் கட்டமாகக் கொண்டதை மானமுள்ள எந்தத் தமிழனும் பொருத்துக் கொள்ள மாட்டான். நான்கு ஆண்டுகள் நிகழ்ந்த பாஞ்சைப் புரட்சிக்கு, பத்தே மாதங்களில் ஓய்ந்துவிட்ட சிப்பாய்ப் புரட்சி எந்த வகையிலும் ஈடாக முடியாது. சிப்பாய்ப் புரட்சியை நாம் குறைத்துக் கூற விரும்பவில்லை. அந்தப் புரட்சியில் ஆவி நீத்த வீரர்கள் அத்தனை பேருக்கும் நாம் வணக்கம் செலுத்துகிறோம். ஆனால், வீரமும் தியாகமும் தங்களிடமிருந்துதான் துவங்குகிறது-தங்களிடமிருந்துதான் துவங்கவும் முடியும் என்றெண்ணும் இறுமாப்பை நாம் எதிர்க்காமல் இருப்பதற்கில்லை.

வரலாற்றில் இதுவரை தமிழருக்கு இழைக்கப்பட்ட அநீதிகளுக்குக் கணக்கில்லை. இந்தியாவின் பழங்குடி மக்கள் தமிழரே என்பதை ஆராய்ச்சி உலகம் அறியும். அறியாதவர்களுக்கு கால்ட்வெல், கிரீயர்சன் போன்ற மேனாட்டறிஞர்கள் எழுதியுள்ள ஏடுகள் அறிவிக்கும். ஆனால், இந்திய வரலாற்றுப் புத்தகத்தின் முதல் ஏட்டில் தமிழர் வரலாறு இடம் பெறவில்லை. காரணம் என்ன? வரலாற்று ஆசிரியர்கள் வடக்கிருந்து தெற்கு நோக்க திட்டமிட்டதுதான். இந்திய விடுதலை போரைப் பற்றிய வரலாற்றிலேனும் இந்த அநீதி இடம் பெறாமல் இருக்க வேண்டும். டில்லி அரசாங்கத்தினர்,

தமிழ் இனத்திற்கு—தமிழ் இனத்தின் தனிப் பெரும் தியாகி யான வீரபாண்டியனுக்கு அநீதி இழைக்கும் எண்ணம் உடையவர்கள் அல்லர். வீர பாண்டியன் வரலாற்றை அறியாததன் காரணமாகவே, இந்தப் பிழை நேர்ந் திருக்கலாம். உண்மை அறியாத மேலிடத்து ஆட்சியினருக்கு, அறிவிக்க வேண்டிய பொறுப்பு தமிழருடைய தாகும். தமிழ் மக்கள் ஆங்காங்கு கூட்டங்கள் போட்டு, டில்லி அரசாங்கத்தின் முடிவை மாற்றுமாறு தீர்மானிக்க வேண்டும். வீரபாண்டியன் நிகழ்த்திய பாஞ்சைப் புரட்சியை ஆரம்பமாகக் கொண்டே விடுதலைப் போர் வரலாறு துவக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்த வேண்டும். தீர்மானம் பின் வருமாறு அமையலாம் :—

“இந்திய விடுதலைப் போர் வரலாற்றை வெளியிடுவதென இந்திய அரசாங்கம் செய்துள்ள முடிவை தமிழ் மக்களடங்கிய இக்கூட்டம் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறது. ஆனல், வடக்கே நடந்த சிப்பாய்ப் புரட்சியிலிருந்தே வாலாற்றைத் துவக்குவதென திட்டமிட்டிருப்பதை பலமாக ஆட்சேபிப்பதுடன் சிப்பாய்ப் புரட்சிக்கு 60 ஆண்டுகளுக்கு முன்பே தமிழ் நாட்டில் வீரபாண்டியக் கட்ட பொம்மன் நிகழ்த்திய ஏகாதிபத்திய எதிர்ப்புப் புரட்சியை ஆரம்பமாகக் கொண்டேவரலாறை துவக்க வேண்டும் என்று மத்திய அரசினரை வற்புறுத்துகிறது. செய்யபட்டுமானல், அச்செயல், வீரபாண்டியன் தியாகத்தையும், அவனைப் பெற்றெடுத்த தமிழினத்தவரின் திறமையும் அவமதித்ததாகும்.”

தமிழ் மக்கள் தனித் தனியாகக்கூட சென்னை முதலமைச்சருக்கும், இந்தியப் பிரதமர், ஜனதிபதி ஆகியோருக்கும் இதுபற்றிக் கடிதங்கள் எழுதலாம்.

உறங்கினல், உரிமை பறிபோகும்; பெருமை மறைக்கப்படும். வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்றபடி வடக்கே வகுத்ததே வரலாறு என்று உலகம் நம்பி விடும். தமிழர்களே, எச்சரிக்கை!

---

# மேகலையும் சிலம்பும்

ம. பொ. சி.

இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரமும், கூல வாணிகன் சாத்தனார் இயற்றிய மணிமேகலையும் தமிழ் ஐம்பெருங் காப்பியங்களைச் சேர்ந்ததாகும். ஏனைய மூன்று காப்பியங்களினும், சிலப்பதிகாரமும் மணிமேகலையுமே இலக்கிய உலகில் போற்றப்பட்டு வருகின்றன.

## அற்புதங்களைக் கூறும் கற்பனைக் காவியம்!

சிலப்பதிகாரம் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறும் வரலாற்று நூல் என்றே மதிக்கின்றனர் ஆராய்ச்சியாளர்கள். இங்குமங்குமாக சில கற்பனைகள் கலந்திருக்கின்றன என்பதை மறப்பதற்கில்லை. சான்றாக, கண்ணகிக்குக் கதிரவன் சாட்சி கூறுவது, வெட்டுண்ட கோவலன் கண்ணகி தொட்ட அளவிலேயே உயிர் பெற்றெழுவது, செங்குன்றத்தின் மீது நின்ற கண்ணகியை இந்திரன் தமர் வந்து வானுலகம் இட்டுச் செல்வது போன்றவை காவியத்தை அழகு படுத்தும் கற்பனைகளேயன்றி, கண்ணால் கண்ட நிகழ்ச்சிகளன்று.

ஆனால், கோவலன் மாதவியின் காதல் மயக்கத்தால் மனையாளை மறந்தது, கானல் வரிப் பாட்டு காரணமாக மாதவியைத் துறந்து மீண்டும் மனையாளோடு வந்து, கண்ணகியின் காற் சிலம்பை விற்க மதுரை யடைந்து மன்னன் தவறால் இன்னலுறுவது, பின்னர் கணவனை யிழந்த கண்ணகி ஆத்திரங் கொண்டு நெடுஞ் செழியனின் அரசை அழிப்பது முதலியவை நடக்க முடியாதன அல்ல. ஆகவே, சிலப்பதிகாரத்தை வரலாறாகக் கொள்வதில் பிழையில்லை.

ஆனால், மணிமேகலைக் காவியத்தின் கதை அமைப்பை நோக்குமிடத்து, அஃதோர் கற்பனைக் காவியமாக வல்லாமல் வரலாற்று நூலாகக் கொள்ளுவதற்கில்லை. மணிமேகலா தெய்வமும் அமுத சுரபியென்னும் அதிசயப் பாத்திரமும் இல்லையானால், மணிமேகலை என்ற காவியமே இல்லையெனலாம். ஆம், மணிமேகலா தெய்வம் நிகழ்த்தும் அற்புதங்களால் தான் மணிமேகலை உதய குமாரனின் மோக வலையினின்றும் தப்புவதோடு, புத்த பீடிகையைத் தரிசிக்கவும்முடிகிறது. மற்றும், அமுதசுரபியின் சக்தியால்தான் மக்கள் மனதைக் கவரும் அற்புதங்கள் செய்கிறாள் மணிமேகலை. அறிவுக் கண்கொண்டு ஆராய்வோர்க்கு மணிமேகலா தெய்வமும் அமுதசுரபியும் கற்பனைப் பாத்திரங்களே யென்பது புலனாகும். இம்முடிவை ஏற்றுக்கொண்டால், மணிமேகலைக் காவியம், கூல்வாணிகன் சாத்தனாரின் கற்பனையேயன்றிநிகழ்ந்த வரலாறன்று என்பது தெளிவு.

சிலப்பதிகாரக் கதையில் கலந்துள்ள கற்பனைகளை அகற்றி

விட்டுப் பார்த்தாலும் கண்ணகியின் புரட்சி வரலாற்றுச் சம்பவங்கள் ஒன்றோடொன்று தொடர்புடையனவாகவே காணப்படுகின்றன. ஆம்; சிலப்பதிகார மாளிகை கட்டுக்கோப்பு சரியாமல் கம்பீரமாகக் காட்சியளிக்கின்றது.

ஆனால், மணிமேகலைக் காவியம் கற்பனைகளையே அஸ்திவாரமாகக் கொண்ட மாளிகையாதலால், கற்பனைகளை அகற்றிப் பார்த்தால் கதையின் கட்டுக்கோப்பு கலைந்து விடுகின்றது.

## சிலம்பில் புகுந்த சேயிழை

மணிமேகலை யென்பாள், கோவலனின் உள்ளத்தைக்கொள்ளை கொண்ட ஆடலரசி மாதவியின் அருமைப் புதல்வி யென்கிறார் புலவர் சாத்தனார். ஆனால் சிலப்பதிகாரத்தில், மாதவிக்கு பெண் பிறந்த செய்தி உரிய இடத்தில் உணர்த்தப்படவில்லை யென்பது இங்கே கவனிக்கத் தக்கது. கோவலன் மாதவியுடன் கூடி வாழ்ந்ததைத அரங்கேற்றுகாதை முதல் வேனிற்காதைவரை ஆறு காதைகளில் விரிவாகக் கூறுகிறார் இளங்கோவடிகள். இந்தக் காதைகள் எதிலும் மணிமேகலையின் பிறப்பு கூறப்படவேயில்லை.

மேலும், மனம் வேறுபட்ட காரணத்தால் கோவலன் தன்னைப் பிரிந்த பின்னர் அவனுக்கு இருமுறை கடிதம் எழுதுகிறாள் மாதவி. அந்தக் கடிதங்களில், கோவலன் தன்பால் கொண்ட கோபத்தைத் தணிவிப்பதற்கான தந்திரங்களனைத்தையும் கையாள்கிறாள். அக்கடிதங்களி லேனும், கோவலனின் ஏக புதல்வியான மணிமேகலையை நினைவூட்டி அவனது மனதை மாற்ற முயன்றிருப்பாளல்லவா? கடந்தஞானியாயினும் தான் பெற்ற மக்களைக் காதலியா திருப்பது தமிழர் மரபல்லவே! ஆனால், சிலப்பதிகாரத்தில் அப்படி யெல்லாம் ஒன்றும் நிகழவில்லை.

அடைக்கலக் காதையில், மாடல மறையோனால்தான் மாதவிக்கு மணிமேகலை பிறந்த செய்தியை முதன்முதல் கேள்விப்படுகிறோம். அதையும் கதை சொல்லுகிற போக்கில் கோவலனிடமே சொல்லக் கேட்கிறோம். இவற்றை யெல்லாம் நோக்குமிடத்து, இளங்கோவடிகளின் அனுமதி யின்றியே மணிமேகலை சில்ப்பதிகாரத்துள் புகுந்தாளோ என்று ஐயப்பட வேண்டி யிருக்கிறது.

## உண்மைக்குத் திரையிடும் பதிகங்கள்

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் தமிழன்னை ஏக காலத்தில் பெற்றெடுத்த இரட்டைக் குழவிகளாக எண்ணப்படுகின்றன. சிலப்பதிகாரப் பதிகத்தின் இறுதியில்,

> **உரைசால் அடிகள் அருள மதுரைக்**
> **கூல வாணிகன் சாத்தன்**
> **கேட்டனன்**

என வருவதாலும், மணிமேகலைப் பதிகத்தின் இறுதியில்,

> **இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப**
> **வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்**

மாவண் தமிழ்த்திறம் மணிமேகலை
துறவு
ஆறைம் பாட்டினுள் அறிய
வைத்தனன்

என இருப்பதாலும் இவ்விரண்டு காவியங்களும் ஒரே காலத்தில் வாழ்ந்து ஒத்த கருத்து கொண்டிருந்த புலவர்களால் இயற்றப் பட்டதாக எண்ணுவதற்கு இட மாயிற்று. இந்த எண்ணமே, அந்த இருபெருங் காவியங்க ளுக்கும் உள்ள அடிப்படை வேற்றுமைகளை மறைத்து நிற் கும் திரையெனத் திகழ்கின்றது. இந்தத்திரையை விலக்கிப் பார்த் தால், மணிமேகலை சிலப்பதிகா ரத்தின் அடிப்படைக் கொள் கைகளுக்கு மாறுபட்ட நெறி களை வற்புறுத்துவது புலனுகும்.

## மாறுபட்ட கருத்துடைய காவியங்கள்

சிலம்புக்கும் மேகலைக்கும் உள்ள வேற்றுமைகளில்முக்கிய மானவை இரண்டு. அவற்றில், ஒன்று நாட்டியத்தைப் பற்றி யது;மற்ருென்று, கண்ணகியின் அரசியல் புரட்சி பற்றியது.

சிலப்பதிகார வரலாறு, கண் ணகி-கோவலன் திருமணம் என் னும் மங்கலச் சடங்குக்குப் பிறகு மாதவியின் ஆடல் பாட லோடு ஆரம்பமாகிறது. சோழ மன்னன், மாதவிக்கு பச்சை மாலையும் பட்டமும் பரிசு தந்து பாராட்டுகிருன். அரங்கேற்றுக் காதையில் ஆடற்கலையின் அரு மை பெருமைகளை யெல்லாம் விரிவாகக்கூறுகிருர் இளங்கோ. வாயினிக்கும் வகையில் வரு ணிக்கிருர் என்ருலும் பொருந் தும். அரங்கேற்றுக் காதையில் மட்டுமல்லாமல், காவிய முழுவ திலுமே வாய்ப்பு கிடைத்த இடங்களி லெல்லாம் ஆடற்கலை யின் அருமையை பாடற் கலை யின் பெருமையை விளக்கி யிருக்கிருர் இளங்கோ வடிகள்.

கூல வாணிகன் சாத்தனுரோ, நடனக் கலை மீது வெறுப்பு கொள்ளும் மாதவியையே அறி முகப்படுத்துகிருர்.

இந்திர விழாவில் வழக்கம் போல் நடனமாடி காணுகின்ற காளையர்க்கு களிப்பூட்டுமாறு மணிமேகலையை அழைக்கும் சித் திராபதிக்கு,

"...................மணிமேகலை,
அருந்தவப் படுத்த லல்லது யாவதுந்
திருந்தாச் செய்கைத் தீந்தொழிற்
படாஅள்"

'மணிமேகலை இனி தவநெறியிற் செல்லுவ தல்லாது நடனமாடும் தவருன செயலில் ஈடுபடமாட் டாள்" எனக்கூறுகிருள் மாதவி. ஆம், இத்தனை காலம் தனது வாழ்வு சிறக்கவும், அரசரும் போற்றி பரிசு தரவும் காரண மாயிருந்த நடனத் தொழிலை, "தீத்தொழில்" என வெறுத்துப் பேசுகின்ருள். இந்த வெறுப்பை வித்தாகக் கொண்டுதான் மணி மேகலைக் காவியம் இயற்றப்பட் டிருக்கிற தென்லாம்.

தமிழகத்தில் நடனக் கலை சிறந்தோங்கி யிருந்த காலத்தில், அது கடவுட் பேரின்பத்தை மறந்து மக்களைச் சிற்றின்பத் தில் ஈடுபடச் செய்கிற தென்ற காரணத்தால், சமணர் களும் பௌத்தர்களும் அதை எதிர்த்து ஆடற்கலையின் செல்வாக்கைக் குறைத்தனர். அதன் காரணமா

கத்தான் ஆடற்கலைக்கு ஆலயங்கள் அடைக்கலந் தந்தன போலும்!

சாத்தனார், இளங்கோவின் இலக்கியத்திற்கு எதிராக நடனக் கலையை வெறுத்ததற்குரிய காரணங்களையும் சிலப்பதிகாரத்தில் காண முடிகிறது. சிலப்பதிகாரத்தை ஆழ்ந்து படிப்போர், கண்ணகி அடைந்த துன்பங்களுக், கெல்லாம் ஆடற்றொழிலே காரணமாய் இருந்திருப்பதை அறிந்து கொள்வர்.

புகார்க் கண்டத்தில், கோவலன் கண்ணகியின்பால் தனக்குள்ள கடமையை மறந்து. மாதவியின் காதலில் மயங்கிக் கிடக்கக் காரணமா யிருந்தது, சோழன் அவையில் நிகழ்ந்த மாதவியின் நடனமே யாகும். கோவலனைக் கொலை செய்யும் அளவுக்கு நெடுஞ் செழியனைக் கொடுங் கோலனாக்கியதற்கும் ஆடற் கலையே காரணமா யிருந்ததைத் மதுரைக் காண்டத்திற் காண்கிறோம். கொலைக் களக் காதையில், பாண்டியன் நெடுஞ் செழியன் தனது அவையிய் நடக்கும் அழகியரின் நடனத்தில் மதிமயங்கியிருந்த நிலையையறிந்த அரசமாதேவி, ஊடல் கொண்டு அந்தப் புரம் செல்கிறாள். அவளது ஊடல் தீர்க்கும் நோக்குடன், அந்தப்புரத்திற்கு விரைந்து கொண்டிருக்கும் சமயத்தில் தான், கோவலனைக் கொல்லுமாறு ஆணையிடுகின்றான், நெடுஞ்செழியன். ஆம்; ஆடல் அரசிகளின் நடனமும் கூடலரசியின் ஊடலுமே நெடுஞ்செழியனைக் கொடுங் கோலனாக்கின.

எனவே, புலவர் சாத்தனார் இளங் கோவடிகளின் எண்ணத்திற்கு மாறாக, நாட்டியக் கலையை வெறுக்கும் காப்பிய மெழுதியதில் வியப்பொன்றுமில்லை.

## புரட்சிக்கு எதிரான போதனை

அரசன் செங்கோல் பிறழ்ந்து கொடுங்கோலனாகிற பொழுது, பெண்கள் அறக் கற்பை விடுத்து மறக்கற்பை மேற்கொள்ள உரிமையுண்டு என்பதை உணர்த்துகிறது சிலப்பதிகாரம். இந்தப் புரட்சி நெறியை வற்புறுத்தவே சிலப்பதிகாரத்தை இயற்றினார் இளங்கோவடிகள்.

ஆனால், மணிமேகலையில் மதுரைப் புரட்சி, கண்ணகி செய்த குற்றம் என்கிறார் சாத்தனார். அதையும் கண்ணகி வாயிலாகவே சொல்லச் செய்வது கவனிக்கத் தக்கது.

மணிமேகலை பௌத்த மதத்தைச் சார்ந்து துறவு நிலை அடைந்த பின்பு, வஞ்சி மாநகர் சென்று சிலை வடிவில் நின்ற கண்ணகி தேவியை வணங்குகிறாள். அப்போது அவள் கண்ணகிசிலையை நோக்கி, கணவனை இழந்த பின்னர் தவ நெறியிற் செல்லாது, மறக்கற்பை மேற்கொண்ட காரணத்தை விளக்குமாறு கேட்கிறாள்.

இக்கேள்விக்கு பதிலாக கண்ணகி தேவி, "கோவலன் கொலையுண்டதற்கும், அது காரணமாக யான் துயருண்டதற்கும் எம் முன்வினைப் பயனே என மதுராபுரி தெய்வம் தெரிவித்த பின்னரும், யான் கோபங் கொண்டு, கூடற்பதியைக் கொளுத்தியது குற்றமே. அக்

குற்றத்தால் உற்ற பாவத்தைப் போக்க மீண்டும் உலகில் தோன்றித் துன்புறுவோம்" எனக் கூறுகிருள்.

இளங்கோ கண்ட கண்ணகி, கோவேந்தனை வாதில் வென்ற பின்னர், கூடற்பதியைக் கொளுத்துங்கால், "கொடுங்கோலன் நகரையே கொளுத்துகின்றேன்; குற்றமிலேன்" என நான்மாடக்கூடல்மகளிர் அறிய, மைந்தர் அறிய, மாண்புமிக்க சான்ருேர் அறியக் கூறுகிருள்.

கண்ணகியின் வெஞ்சினத்தால் அல்லற்பட்ட மதுரைப் பெண்டிரும், கண்ணகி தேவியின் "கொங்கைப் பூசல் கொடிதன்று; நியாயமே" எனக் கூறுகின்றனர். மற்றும் குன்றக்குரவர்,

**கோமுறை நீங்கக் கொடி மாடக் கூடலை**
**தீமுறை செய்தாளை ஏத்தியாம் பாடுதும்**

"கொடுங்கோலனின் நகரைத் திக்கிரையாக்கிய வீரப்பெண்ணும் கண்ணகியைப் பாடுவோம்" என்கின்றனர்.

**கொங்கையால் கூடற்பதி சிதைத்து கோவேந்தை**
**செஞ்சிலம்பால் வென்ருளைப் பாடுதும்**

என வஞ்சி மகளிரும் கண்ணகியின் புரட்சியைப் போற்றிப் புகழ்கின்றனர். சிலப்பதிகாரத்தில் எந்த இடத்திலும் கண்ணகியின் புரட்சி தவறெனக் கூறவில்லை இளங்கோவடிகள்.

சாத்தனுரோ, பேச முடியாத கற்சிலையையும் பேசச் செய்து, மதுரைப் புரட்சி தவறெனக் காட்டுவதோடு கணவனை இழந்த நிலையில் கண்ணகி துறவு நிலையை மேற்கொண்டிருக்க வேண்டியதே நியாயம் என மணிமேகலையின் கேள்வியால் வற்புறுத்துகிருர்.

சிலப்பதிகாரத்துக்கும் மணிமேகலைக்கும் உள்ள வேற்றுமைகள் இன்னும் பல. பொதுவாக மணிமேகலை தமிழரின் மரபுக்கு ஒவ்வாத துறவு நிலையை வற்புறுத்துவதற்காக, அதிலும் இல்லறத்தையே நல்லறமாகக் கொண்ட பெண்ணினத்தைத் துறவு நிலையில் ஈடுபடும்படி தூண்டுவதற்காக இயற்றப்பட்டதேயாகும். அதனுற்ருன்

(16-ம் பக்கம் பார்க்க)

---

# டில்லி ஒப்பந்தம்

எஸ். ஏ. ரஹீம்

உலக நிலப் பரப்பின் எந்தப் பகுதியில் மனிதன் வாழ விரும்பி ஞலும் அதற்கு எத்தகைய தடையும் இருக்கக் கூடாது. ஏனெனில், அது மனிதனுக் குரிய உரிமைகளில் அடிப்படை யான ஒன்று. இந்தக்கண்ணேட் டத்தில் தான் இந்தியா—பாக் கிஸ்தானிலுள்ள சிறுபான்மை யினரின் பிரச்னையை பரிசீலனை செய்ய வேண்டும். இந்தியாவி லும் சரி, பாக்கிஸ்தானிலும் சரி, சிறுபான்மையோரின் பிரச்னை யானது மதத்தின் அடிப்படை யில்தான் உருவாகி யிருக்கிறது. இவ்விரு நாடுகளிலும், வேறு பல மதத்தினரும், சாதியினரும் இருந்து வருகின்றனர். என்ரு லும், இந்து-முஸ்லிம் என்ற இரு மதங்களின் மக்களே சிறு பான்மையோராகக் கருதப்படு கின்றனர்.

## இது ஏன்?

ஆங்கிலேயர் இந்திய நாட்டை என்றென்றும் ஆள வேண்டும் என்ற எண்ணத்தால், இந்து—முஸ்லிம் மதங்களுக் கிடையே பிளவுண்டாக்கிய தோடு, பல பிரச்னைகளையும், சிருஷ்டித்து வளர்த்து விட் டார்கள். இறுதியாக, இந்தியா வைவிட்டு ஆங்கிலேயர் வெளி யேறும் தருணத்தில் இந்த பிரச் னைகளுக்கு, "சிரஞ்சீவி"த் தன்மை யுண்டாக்கும்எண்ணத் துடனேதான் இந் நாட்டைத் துண்டாடினர்கள். ஆனல், பிரச்னையை நிரந்தரமாக தீர்த்து விடுவதற்காகவே நாட்டைத் துண்டாடுவதாக சாமர்த்திய மாகப் பிரச்சாரம் செய்தார்கள். "குறைந்த பட்சக் கெடுதல்" என்ற ஆறுதலோடு நாட்டுப் பிரிவினையை ஏற்றுக் கொண்ட னர் இந்திய மக்கள்.

## பிரச்னை தீர்ந்ததா?

"கிணறு வெட்ட பூதம் புறப் பட்டது" என்பதற்கொப்ப பிரி வினைக்குப் பிறகு பிரச்னைகளில் சிக்கல்கள் ஆரம்பமாகி விட் டன. கடவுளின் பெயராலும், மதங்களின் பெயராலும் மனி தன் எந்த நிலப்பரப்பிலும் வாழ் வதற்கான அடிப்படை உரிமை களுக்கு அபாயம் வந்து விட் டது. கிழக்கு, மேற்கு வங்கத் தில் சமீபத்தில் நிகழ்ந்த கொலை, கொள்ளை, கற்பழித்தல், தீவைத் தல் முதலிய சம்பவங்களே நமக்கு நிலைமையை நிரூபித்துக் காட்டுகின்றன.

## பிரச்னையைத்தீர்க்கவே கூடினர்

இந்தியா, பாகிஸ்தான் பிரதம மந்திரிகள் டில்லியில் கூடி யது, பிரிட்டிஷார் வளர்த்து வைத்த ஒரு பிரச்னைக்கு முடிவு காணத்தான் என்ற கண்ணேட்டத்தோடு நிலை மையை ஆராய்வோம்.

நேரு-லியாகத் அலி ஒப்பந்தத் தின் மீது பல விதமான அபிப் பிராயங்கள் படையெடுத் துக் கொண்டிருக்கின்றன.

மரத் தன்மை வாய்ந்த பொது மக்களைக் குழப்பத்திலாழ்த்தும் வகையில் ஒப்பந்தம் பற்றிய செய்திகளுக்கு பத்திரிகைகள் முதன்மை தருகின்றன. மக்கள் உண்மையை உணர்ந்து பிரச்னைக்கு நிலையான வழி காண அவை உதவி செய்ய வில்லை. மக்களின் மனோ நிலை மாற்றம் ஏற்பட்டால் தான் நாட்டில் அமைதி நிலவ முடியும். காகித ஒப்பந்தங்களின் கருத்துக்களை அமுலுக்குக் கொண்டு வரும் பொறுப்பு அரசாங்கத்தாருடையதாக இருப்பினும், அதை நடை முறையில் நடத்திக் காட்டி ஒப்பந்தம் வெற்றி பெற செய்யக் கூடியவர்கள் பொது மக்கள் தான். ஆனால், மக்கள் மனோ நிலையில் மாற்றம் ஏற்பட ஒப்பந்தத்தில் வழி வகுக்கப்பட வில்லை. இந்தக் குறை நீக்கப் படாத ஒப்பந்தங்கள், தீய சக்தியையே வளர்த்துவிடும். இதற்கு முக்கர்ஜியின் ராஜிநாமாவே சான்று.

சுதந்திரப் போராட்ட காலத்தில் மக்களிடையே தொடர் பற்றிருந்த வகுப்பு வாதிகளும் முதலாளித்துவ மனப்பான்மையுள்ளவர்களும் இந்திய அரசாங்கத்துக்குள் இழுத்துக் கொள்ளப் பட்டனர். அதே நேரத்தில், பாக்கிஸ்தானில் எல்லே காந்தி போன்ற சாதி, சமய வேற்றுமையற்ற அரசியல் வாதிகள் சிறையில் தள்ளப்பட்டனர்.

இந்திய அரசாங்கத்தில் இடம் பெற்ற வகுப்பு வாதிகள் மக்களிடையே தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள தாங்கள் பதவி வகித்த காலத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். சமயம் நேரும் போது தேசிய சக்திக்கு எதிராக அதிகாரத்தைக் கைப் பற்ற வகுப்பு வாதிகள் எதையும் செய்யத் தயங்க மாட்டார்கள் என்பதை முக்கர்ஜியின் ராஜிநாமா மெய்ப்பித்து விட்டது. வங்க மக்களிடையே ஏற்பட்டிருக்கும் அதிருப்தியைப் பயன் படுத்திக் கொண்டு, வகுப்பு வாத வெறியூட்டி அந்தமாகாண அரசாங்கத்தைக் கைப்பற்றி விடலாம் என்ற எண்ணத்துடனேயே முக்கர்ஜி ராஜிநாமா செய்திருக்கிறார். இது முற்றும் உண்மை.

இஸ்லாமிய அரசு என்பது, காந்தி போதித்த ராம ராஜ்யம் போன்றது தான் என்று கூறும் லியாகத் அலி, அந்த "உன்னத அரசை" உருவாக்கும் உரிமையை நவகாளியிலும் பஞ்சாபிலும் படுகொலைகளை நடத்திய பின்னர் தான் அடைந்தார் என்பதை நாம் மறக்க வில்லை.

கிழக்கு வங்கத்தில் பாக்கிஸ்தான் முஸ்லிம்கள் புரிந்த கொலை பாதகச் செயல்களுக்குள்ளாகி, வீட்டை விட்டு வெளியேறி உறவினரைத் துறந்து, உடைமைகளைப் பறி கொடுத்து உயிர் தப்பி மேற்கு வங்கத்துக்கு வந்து குவிந்து விட்ட மக்களிடம் எவரும் அனுதாபம் காட்டுவது இயற்கை. அனைகளைப் போன்று நடு வீதிகளில் உறங்கும் அகதிகள் தங்கள் நிலைக்கு நாட்டுப் பிரிவினையும், அதை ஏற்றுக் கொண்ட அதிகார பீடத்திலுள்ள தலைவர்களும் தான் காரணம் என்று எண்ணுவதும் இயற்கை. ஆனால் இந்த

அதிருப்தியை உபயோகப் படுத்திக் கொண்டு, அதிகாரத்தைக் கைப்பற்ற சதி செய்வது மனித இனத்துக்கே செய்யும் மாபெரும் துரோகமாகும்.

மக்கள் தொகையிலும், நிலப் பரப்பிலும் பாக்கிஸ்தானை விடப் பெரியது இந்தியா. அப்படியிருந்தும்வகுப்பு கலவரங்கள் முதலில் பாக்கிஸ்தானில்தான் ஆரம்பமாகின்றன. அதன்எதிரொலியாகவே, இந்தியாவில்இரண்டொரு பாகங்களிலும் வகுப்புக் குழப்பங்கள்ஏற்பட்டு விடுகிறது. இது அனுபவரீதியான உண்மை. இந்தியாவை விட பாக்கிஸ்தானில்தான் வகுப்பு வெறியை கிளப்பக் கூடிய தீய சக்திகள் அதிகம் வேலை செய்கின்றன என்பதை எல்லோருமே ஒப்புக் கொள்வார்கள். இந்தியத் தலைவர்கள் தேசிய எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்தவர்கள். பாக்கிஸ்தான் தலைவர்களோ, மதத்தை அடிப்படையாகக் கொண்டு உருவானவர்கள். பாக்கிஸ்தான் ஏற்பட்ட பின்னரும், இந்த மனப்பான்மை அவர்களிடம் மாறவில்லை. பாக்கிஸ்தான் தலைவர்களின் மாற்ற மடையாத மனநிலையில். அமைதிக்குபங்கம் என்றென்றும் இருந்து கொண்டுதான் இருக்கும்.

சிறுபான்மையினர் சார்பாக ஒருவரை மந்திரியாக்கி பிரச்னைக்கு முலாம் பூச நேரு-லியாகத் ஒப்பந்தத்தில் விதி வகுக்கப்பட்டிருக்கிறது. இந்த பதவி பேரத்தால், பாக்கிஸ்தானிலுள்ள இந்து சிறுபான்மையினரிடம் நம்பிக்கை தோன்றுமென்பது நிச்சயம். இதற்கு மாருக, எல்லை காந்தியையும் அவரது சகோதரரையும் சிறைச்சாலையிலிருந்து விடுதலை செய்ய வழி கண்டிருந்தால் பாக்கிஸ்தான் சிறுபான்மையினரிடையே ஓர் புத்துணர்ச்சி பிறந்திருக்கும். இந்திய அரசாங்கம் பாக்கிஸ்தானுக்கு ஒரு நல்லெண்ணத் தூதரை அனுப்ப விருப்பது நல்லது தான். ஆனல், இந்தியாவின் சார்பாக ஒரு இந்துத் தலைவரை அனுப்புவதை விட, பாக்கிஸ்தானிலுள்ள எல்லை காந்தியை நமது பிரதிநிதியாக ஏற்றுக் கொள்ளுமாறு பாக்கிஸ்தானை வற்புறுத்தியிருந்தால், நிலைமை நிரந்தரமாக மாறுவதற்கான வழி பிறந்திருக்கும். வகுப்பு ஒற்றுமைக்காக இந்தியாவில் மகாத்மா சாதித்ததை, பாக்கிஸ்தானில் எல்லை காந்தியாலும் சாதிக்க முடியும். இந்த எண்ணம் இடம் பெருததால், டில்லி ஒப்பந்தம் ஒளியிழந்து விளங்குகிறது. கராச்சி செல்லும் நேரு, இதை சாதித்துத் திரும்பினல், டில்லி ஒப்பந்தம் வெற்றி பெறுவதோடல்லாமல் இந்தியா-பாக்கிஸ்தான் சிறுபான்மைப் பிரச்னைக்கும் கராச்சியிலேயே சாவு மணி அடித்து விட்டு திரும்பியதாக வரலாறு சொல்லும்.

---

(13-ம் பக்கத் தொடர்ச்சி)

பௌத்த மதப் பாதையில் தமிழினத்தை ஈடுபடுத்த நினைத்த சாத்தனர், பெண் மக்கள் இன்பக் கலையிலும், வீரக் கலையிலும் ஈடுபடுவதை எதிர்ப்பவரானர். சிலப்பதிகாரம் இவ்விரண்டுகலைகளையும் வற்புறுத்த எழுந்த இணையற்ற காவியமாகும்.

# வாக்காளரும், தேர்தலும்

'தேசிய வாதி'

●

இந்திய அரசியல் நிர்ணய மன்றத்தார், வகுத்துத் தந்த குடியரசு அமைப்புக்கான தேர்தல், அண்மையில் நடைபெற விருக்கிறது. வயதுவந்த மக்கள் எல்லோரும் வாக்களிக்கக் கூடிய தேர்தல் இந்தியாவின் வரலாற்றிலேயே இப்போதுதான் முதன் முதலாக நடைபெறப் போகிறது. ஆகவே, புதிய தேர்தலைப் பற்றி ஆர்வம் கொண்டுள்ளோர் கூட, அதன் முடிவு என்னுகுமோ என்ற ஐயம் உடையோராக இருக்கின்றனர்.

வயதுவந்த ஒரே காரணத்திற்காக மட்டும் மக்களுக்கு வாக்குரிமை அளித்தது தவறு என்று வாதிப்போரும் உண்டு. "கல்வியறிவற்ற மக்கள் வாக்காளருக்குள்ள கடமையை அறிந்து நடப்பார்களா? என்பது அவர்கள் கேள்வி.

எழுதப் படிக்கத் தெரியாத மக்களுக்கு தேசபக்தி இருக்காதென்பது அவர்கள் எண்ணம் போலும்! உண்மையைச் சொல்லப் போனுல், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கொடுங்கோலிலிருந்து இந்தியாவை விடுவித்து, அதைக் குடியரசு நாடாக்கியதில் எழுதப் படிக்கத் தெரியாத ஏழை மக்களுக்கே பெரும் பங்கு உண்டு. பொருளில் ஏழையாக இருப்போரெல்லாம், புத்தியிலும் ஏழையாகத் தான் இருப்பார்கள் என்று முடிவு கட்டுவது தேசத்தையே அவமதிப்பதாகும்.

மக்கள் அறிவு பெறுவதற்கான மார்க்கங்கள் இரண்டு. ஒன்று, கல்வி; இன்னென்று கேள்வி. கல்வி மூலம் அறிவு பெற வசதியற்ற மக்கள், கேள்வி மூலம் ஞானம் பெற வாய்ப்புண்டு. மேலும், இந்தியக் குடியரசு, ரஷ்யாவைப் போன்று ஒரே கட்சி, ஒரே கொள்கை, ஒரே தலைமையைக் கொண்ட சர்வாதிகாரக் குடியரசு அன்று பல கட்சிகளுக்கும் கொள்கைகளுக்கும் இடந்தரக் கூடிய ஜனநாயகக் குடியரசு. ஆகவே, இந்தியாவில்

இன்று ஆளும் கட்சியாகிய காங்கிரசுக்கு எதிர்கட்சிகள் தோன்றுவது இயற்கை. ஆகவே, தேர்தல் காலத்தில் ஒன்றுக்கொன்று மாறுபட்ட கட்சிகள் செய்யும் பிரச்சாரங்களின் மூலமே வாக்காளர்கள் அரசியல் அறிவைப் பெறமுடியும். 'கற்றிலனாயினும் கேட்க' என்பது வள்ளுவர் இட்ட கட்டளையன்றோ! கல்வியில் சிறந்த கம்பரும், தாம் காண விரும்பிய லட்சிய உலகில் வாழும் மக்களுக்கு, 'வெண்மை இல்லை பல் கேள்வி மேவலால்' என்கிறார். அறிவின் சிகரத்துக்குச் செல்ல ஏட்டுக்கல்வி அவசியமே என்றாலும், அறியாமை அகலுவதற்கு கேள்வி ஞானம் ஒன்றே போதுமானதென்பது தமிழ்ப் புலவோரின் கொள்கை.

நடைமுறையிலுள்ள குடியரசு அமைப்பானது குற்றங் குறைகளே இல்லாதது எனக் கூறமுடியாது. அகற்றப்பட வேண்டிய குறைகளும்; புகுத்தப்பட வேண்டிய முற்போக்கு கொள்கைகளும் நிறைய உண்டென்பதை, புதிய அரசியலைத் தயாரிப்பதில் பெரிதும் பங்கு கொண்ட டாக்டர் அம்பேத்கரே ஒப்புக்கொண்டுள்ளார். ஆகவே, இந்திய அரசியல் கட்சிகள் பரஸ்பரம் வசை பாடுவதிலும் வம்பளப்பதிலும் கவனம் செலுத்துவதை விட்டு புதிய அரசியலிலுள்ள குறைகளைப் போக்கி, கொள்கைகளைப் புகுத்தும் லட்சிய நோக்குடன், தேர்தல் திசையில் கவனஞ் செலுத்த வேண்டும். புதிய அரசியல் அமைப்பானது, திருத்தத்திற்கே இடமில்லாத தீர்ப்பன்று.

எந்த நாட்டிலும் சரி, எந்த காலத்திலும் சரி, அரசியல் அமைப்பானது முடிந்த ஒரு முடிவாகக் கருதப்பட்டதே இல்லை. கால மாறுதலுக்கு ஏற்பவும், மக்கள் கருத்து வளர்ச்சிக்கு ஒப்பவும் உலக நாடுகள் பலவற்றிலும் அவ்வப்போது அரசியல் அமைப்புகள் சட்டபூர்வமாகவும், சமாதான முறையிலும் மாற்றியமைக்கப்பட்டு வந்ததை நாம் கண்டிருக்கிறோம். இந்திய அரசியல் அமைப்பும் காலமாறுதலுக்கு ஏற்ப வளைந்து கொடுக்கும் பான்மையில் தான் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, அதில் லட்சிய ரீதியாக மாறுதல் காண கட்சிகள் வேலை செய்யுமானால், மக்கள் மனமார வரவேற்பர் என்பதில் ஐயமில்லை.

வரப்போகும் தேர்தலில் கட்சிகளின் கடமை மகத்தானது. ஒழுக்க நெறியில்

உலகுக்கே வழி காட்டியாக இருந்தது இந்திய நாடு. ஆனல் இன்றே, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் மக்களிடையே ஒழுக்கம் வெகுவாகக் குறைந்துவரக் காண்கிறேம். ஆகவே, தேர்தலில் போட்டியிடும் கட்சி ஒவ்வொன்றும், இந்திய சமுதாயத்தை ஒழுக்கத் துறையில் உயர்த்துவதையே தங்கள் முதல் கடமையாகக் கொள்ள வேண்டும். கட்சிகள், தத்தம் அபேட்சகரைத் தேர்ந்தெடுக்கும்போது அவரது கல்வி, அறிவு, அரசியல் கொள்கை, நிர்வாகத் திறமை ஆகியவற்றை கவனிப்பது போலவே, சொந்த வாழ்விலும், பொது வாழ்விலும் அவர் எவ்வளவு தூரம் ஒழுக்கமுடையவராக இருந்து வந்திருக்கிறர் என்பதையும் கவனிக்க வேண்டும். அபேட்சகரது, ஒழுக்க நெறி ஒன்றையே முக்கியமாக கவனிக்க வேண்டும் என்றாலும் மிகையன்று.

இது ஜனநாயக சகாப்தம். இந்தியாவும் ஜனநாயகக் கொள்கை வழிச் செல்லும் நாடு. ஆகவே இங்கு, அரசியல் கட்சிகள் அனந்தம் தோன்றும். தேர்தல் காலம் நெருங்க, நெருங்க கட்சிகளின் தோற்றமும், கொள்கைகளின் போராட்டமும் அதிகப்படுவது இயற்கை. வாக்காளர்கள் அதைக் கண்டு அலுப்படைவதோ, ஆத்திரம் கொள்வதோ கூடாது. ஜனநாயகம் என்பது ஒரு மரத்தைப் போன்றதென்றல், அரசியல் கட்சிகளை அம்மரத்தோடு பொருந்தியுள்ள கிளைகளுக்கு ஒப்பிடலாம். கிளைகளற்ற மரம் பசுமை இழந்து பட்டுப் போவது போல கட்சிகள் இல்லாத நாட்டில், ஜனநாயகம் சிறப்பிழந்து செத்து விடுவது திண்ணம். கட்சிகள் மாறி மாறி ஆட்சி பீடத்தைக் கைப்பற்றுவது அரசியல் விபத்தன்று; ஜனநாயக தேவதையின் விளையாட்டேயாகும்.

மாகாணங்களிலும் சரி, மத்திய ஆட்சியிலும் சரி பாராளுமன்றங்களில் ஆளும் கட்சிக்குப் பலமான எதிர்க் கட்சி அமையும்படி செய்ய வேண்டிப்து வாக்காளர்களின் கடமையாகும். ஏதோ பெயரளவுக்கு எதிர்க்கட்சி இருந்தால் மட்டும் போதாது. ஆளுவோர் தவறு செய்யும் காலத்தில் அதை எடுத்துக் காட்டி இடித்துக் கூறி வெற்றிபெறும் அளவுக்கு எதிர்க் கட்சி சக்தி பெற்றதாய் இருக்க வேண்டும். இன்றுள்ள நிலையில் இந்தியாவின் ஆளும் கட்சியான காங்கிரஸே மக்களிடையில் அதிக செல்வாக்குப் பெற்றிருக்கிறது. காங்கிரசுக்கு எதிர் கட்சி என்று சொல்லக் கூடிய அளவுக்கு இந்தியாவில் எந்தக் கட்சியும் இன்னும் பலம் பெறவில்லை. ஆகவே, அடுத்த தேர்தலுக்குப் பிறகும் காங்கிரஸே ஆளும் கட்சியாக இருக்குமென்பது அரசியல் ஞானமுடைய எவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய உண்மை. ஆகவே, காங்கிரசின் பொறுப்பு மகத்தானது. வரப் போகும் தேர்தலில் காங்கிரசுக்கு வெளியேயுள்ள ஆற்றல் படைத்த அரசியல் வாதிகள் பாராளுமன்றங்களில் இடம் பெறுவதற்கு காங்

கிரஸ் அனுமதிக்க வேண்டும். காங்கிரசுக்கு எதிர்க் கட்சியின ராயினும் சரி; அவர்களிலும் சட்டத்திற்கும் சமாதானத்திற் கும் மதிப்பு கொடுக்கக் கூடிய வர்கள் உண்டு. அத்தகையவர் கள் பாராளு மன்றங்களில் காங்கிரசுக்கு எதிர்க் கட்சி யினராக இருப்பதால் கேடொன்றும் நேராது. புதிய அரசியல் அமைப்புப்படி வகுப்பு வாதத் தொகுதிகள் ரத்து செய்யப்பட்டு விட்டன. இது வரவேற்கத் தக்கதே. ஆனால், இதனால் சிறுபான்மை வகுப்பினர் புறக்கணிக்கப்படும் நிலை ஏற்படக் கூடாது. வகுப்பு வாத வெறியாட்டங்களுக்கு வாக்காளர்கள் இரையாக வொட்டாத சூழ் நிலையை ஏற் படுத்தித் தரவேண்டியது ஆளும் கட்சியினரின் அவசரக் கடமையாகும். அரசியல் ஞான மும் நிர்வாக ஆற்றலு முடைய ஒரு கிறிஸ்தவரோ அல்லது ஒரு முஸ்லீமோ பெருவாரியான இந்து வாக்காளர்களால், தேர்ந் தெடுக்கப்படும் போதுதான் வகுப்பு வாதம் மறையும்.

வகுப்பு வாதத்தை விட மிகக் கேவலமானது சாதிவெறி. அந் சாதிய வெறிகளைத் தேர்தல் முகாமில் நுழைய விடக் கூடாது. சாதீயஅமைப்புகளின் பேராலோ,சாதிகளின் பேராலோ நிற்கும் அபேட்சகர்களை வாக் காளர்கள் தயவு தாட்சண்யம் இன்றி நிராகரிக்க வேண்டும். அத்தகையவர்களைத் தேர்ந் தெடுப்பது ஜனநாயகக வளர்ச் சிக்கு தடைசெய்வதாகும்.

# அமெரிக்க அரசியலில் :: ராஜ்யங்களின் நிலைமை

(சோம. லெ. இலக்குமணச் செட்டியார்)

[குறிப்பு:- திரு. சோம. இலக்குமணச் செட்டியார், உலக நாடுகளில் பிரயாணம் செய்து அங்கெல்லாம் அரசியல் அமைப்புகள் எப்படி வேலை செய்கின்றன என்பதை நேரில் காணும் வாய்ப்புப் பெற்ற இளைஞர். சமஷ்டி அமைப்பு நடைமுறையிலிருக்கும் நாடுகளில், ராஜ்யங்களுக்கும், சமஷ்டிக்கும் உள்ள உறவுகளை இந்திய அரசியலோடு ஒப்பிட்டு, 'முரசி'ல் தொடர்ந்து எழுதுதற்கு இசைந்துள்ளார். அவருக்கு எமது அன்பு கலந்த நன்றி. -ஆசிரியர்]

1950 ஜனவரி 26-க்கு முன் சென்னை, வங்காளம் ஆகியவை 'மாகாணங்கள்' என அழைக்கப்பட்டன. இந்தியக் குடியரசு ஏற்பட்ட பின் இவை 'ராஜ்யங்கள்' ஆகிவிட்டன. எனவே, மாகாணத்துக்கும் ராஜ்யத்திற்கும் உள்ள வேறுபாட்டை அறிவது இன்றியமையாதது. விரிந்த பரப்புடைய ஒரு நாட்டை ஆட்சி செய்வதற்கு உதவியாக, நிர்வாக சௌகரியத்திற்காகப் பல பகுதிகளாகப் பிரிப்பதுண்டு. இப் பிரிவுகள் மாகாணம் என்ற பெயரால் அழைக்கப் படுகின்றன. மத்திய அரசியலார் தம் அதிகாரங்களில் சிலவற்றை மாகாணங்களுக்கு விட்டுக் கொடுப்பதாகவே இது பொருள்படும். ராஜ்யம் (ஸ்டேட்) என்பது இதற்கு நேர்மாறான கருத்தை உடையது. தனியே அரசு நடத்த எல்லாத் தகுதிகளையும் உடைய பல பிரதேசங்கள் தங்களுடைய பொது நன்மைக்காகவும், அயலாரின் படையெடுப்பைத் தடுப்பதற்காகவும் வெளிநாட்டு உறவு, தற்காப்பு, நாணயம் போன்ற விஷயங்களைப் பற்றி முடிவு செய்யும் உரிமையையுடைய ஒரு பொது சமஷ்டி அரசாங்கத்தைத் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொள்வதாகும்.

இனி, இந்தியாவிலும் அமெரிக்காவிலும் ராஜ்யங்களின் நிலைமையை ஒப்பிட்டுப் பார்ப்போம். ஒப்பிடுவதற்கு மற்ற நாடுகளை எடுத்துக் கொள்ளாமல் அமெரிக்காவை எடுத்துக் கொண்டதற்கு இரு காரணங்கள் உண்டு. ஒன்று, மற்ற பல அம்சங்களில் அமெரிக்கா அரசியல் சட்டத்தை பின் பற்றியே நமது அரசியலமைப்பிலும் ராஜ்களுக்கு மேலும் உரிமைகள் கொடுத்திருக்க வேண்டும். மற்றொன்று, சமஷ்டி முறையான ஆட்சி பெடரல் கவர்ன்மென்ட் அமலிலுள்ள நாடுகளில் நம் நாட்டைப் போன்ற நிலை அமெரிக்காவில் மட்டுமே நிலவுகிறது. வேறு நாடுகளில் ஒரு ராஜ்யத்திற்கும் மற்றொரு ராஜ்யத்திற்கும் வேறு பாடுகள் மிகுதி

யாக இல்லை. நம் நாட்டில் வங்காளிகள், மராட்டியர், சீக்கியர் தமிழர் போன்ற தனி தனி இனங்கள் தனித்தனி ராஜ்யங்களில் வாழ்வது போல, அமெரிக்காவில் அயர்லாந்திலிருந்து குடியேறியவர்கள் மசாசுசட்ஸ் போன்ற ராஜ்யங்களிலும், ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய நாடுகளிலிருந்து குடியேறியவர்கள் கலிபோர்னியா போன்ற ராஜ்யங்களிலும், பிரான்ஸிலிருந்து குடியேறியவர்கள் லுயியானு போன்ற ராஜ்யங்களிலும் இவ்வாருக வாழ்கிருர்கள். காஷ்மீரில் வாழும் இந்தியனுக்கும் கன்னியாகுமரியில் வாழும் இந்தியனுக்கும் எவ்வளவு வேறுபாடு உண்டோ அவ்வளவு வேறுபாடு சான்பிரான்சிஸ்கோவில் வாழும் அமெரிக்கனுக்கும் நியூயார்க்கில் வாழும் அமெரிக்கனுக்கும் உண்டு.

அமெரிக்க ராஜ்யங்களின் நிலையை மூன்று பிரிவுகளாக ஆராயலாம். இவையாவன: 1. ராஜ்யங்களின் கௌரவம் 2. ராஜ்யங்களின் அதிகாரங்கள் 3. ராஜ்யங்களின் வரி விதிக்கும் உரிமைகள்.

## ராஜ்யங்களின் கௌரவம்

நாட்டின் பெயரிலேயே ராஜ்யங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பதை முதலில் கவனிக்கலாம். "அமெரிக்காவின் ஐக்கியப்பட்ட ராஜ்யங்கள்" என்பதே அமெரிக்காவின் சட்டரீதியான பெயர். பெயரிலிருந்தே பல ராஜ்யங்கள்' அமெரிக்காவில் இருப்பது புலனுகும்.

மேலும், அமெரிக்கர் தங்கள் நாட்டைக் குறிப்பிடும் போது "ராஜ்யங்கள்" (ஸ்டேட்ஸ்) என்றுதான் கூறுவரேயன்றி, அமெரிக்கா என்று கூறுவது வழக்கு அன்று. உலகின் பல நாடுகளில் அமெரிக்கர்களை நான் சந்திக்க நேரிட்ட போதெல்லாம். அவர்களை "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டால், "நான் அயோவாவிலிருந்து வருகிறேன்," அல்லது "நான் விர்ஜீனியாவிலிருந்து வருகிறேன்" என்றுதான் கூறுவர். அமெரிக்காவிலிருந்து வருவதாக ஓர் அமெரிக்கர்கூட கூறி நான் கேட்டதில்லை. இவ்வாறு அமெரிக்காவில் ராஜ்யங்களுக்கு ஒரு தனித்த அந்தஸ்து இருப்பதற்குக் காரணம் முதலில் ஐக்கியப்பட்ட 13 ராஜ்யங்களும் அமெரிக்க சமஷ்டி அரசாங்கம் தோன்றுவதற்கு முன்னிருந்தே இருந்து வருவதாகும்.

ஒவ்வொரு ராஜ்யத்தின் பெயராலும் பெரிய பெரிய வீதிகள் அமெரிக்கத் தலைநகரான வாஷிங்டனில் அமைக்கப்பட்டிருக்கின்றன. டில்லியில் அவ்வாறு பெரிய சாலைகளுக்குப் பெயரிடுவதென்ருல், பலத்த எதிர்புக்கூட இருக்கலாம்! மேலும், அமெரிக்காவில் ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் முத்திரை (சீல்), கீதம், பறவை, கொடி, லட்சியக் கொள்கை ஆகிய சின்னங்கள் தனித்தனியே உண்டு.

48 ராஜ்யங்களுக்கு அறிகுறியாக ஒரு ராஜ்யத்துக்கு ஒரு நட்சத்திரக் குறி வீதம் 48 நட்சத்திரக் குறிகள் அமெரிக்கக் கொடியில் இருப்பதும் சிறப்பாகக் கவனிக்கத் தக்கது.

அமெரிக்க அரசியல் சட்டப் ஒவ்வொரு ராஜ்ய சட்டசபைகளிலும் நிறைவேறிய பின்பே அமுலுக்கு வந்ததும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியதொன்று.

அமெரிக்காவில் ஒரு ராஜ்யத்துக்கு மற்றொரு ராஜ்யம் எவ்வகையிலும் தாழ்ந்ததல்ல. இந்தியாவில் ஏ. பி. சி. என்று மூன்று விதமான ராஜ்யங்கள் இப்போது இருந்து வருவதை வாசகர்கள் அறிவார்கள். மேலும், அமெரிக்க காங்கிரசின் மேல் சபையாகிய செனேட்டில் ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் 2 பிரதிநிதிகள் வீதம் உண்டு. மொத்தம் 48 ராஜ்யங்களுக்கும் 96 பிரதிநிதிகள் உள்ளனர்; இதனால் ராஜ்யங்களின் சம அந்தஸ்து புலனாகும். இந்திய அரசியல் சட்டபடி, இந்தியப் பார்லிமெண்டின் மேல் சபையில், 'பட்டியாலா கிழக்கு பஞ்சாப் சமஸ்தானங்கள்' என்ற ராஜ்யத்துக்கு 3 பிரதிநிதிகள் இருப்பார்கள்; ஆனால், 'உத்தர பிரதேஷ் ராஜ்யத்துக்கு 31 பிரதிநிதிகள் இருப்பார்கள்!

அமெரிக்காவில் எந்தத் தேர்தலிலும் சரி; யார் யார் ஓட்டுப் போடலாம் என்பதை ராஜ்ய அரசாங்கங்களே முடிவு செய்கின்றன. ஒரு ராஜ்யத்தின் கவர்னர் அந்த ராஜ்யத்தில் குடியிருப்பவராக இருக்கவேண்டும், மேலும், அவர் அந்த ராஜ்யத்து மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுகிறார். இந்தியாவில், ஒரு ராஜ்யத்தின் கவர்னர் புதிய அரசியல் சட்டபடி குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவார். அவ்வாறு நியமிக்கப்படும் கவர்னர் இந்தியப் பிரஜையாக இருக்க வேண்டும் என்று மட்டும் தான் இந்திய அரசியல் சட்டத்தின் 157-வது பிரிவு கூறுகிறது.

ஒரு ராஜ்யத்தின் கவர்னராக இருந்தவரே அமெரிக்க குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவதும் அமெரிக்காவில் பெரும்பாலும் முறையாகி விட்டது. தியோடர் ரூஸ்வெல்ட், லாஃளாட்டி, வூட்ரு வில்சன், பிராங்ளின் ரூஸ்வெல்ட் ஆகிய அமெரிக்கத் தலைவர்களெல்லாம் ஒரு காலத்தில் தத்தம் ராஜ்யங்களின் கவர்னர்களாக இருந்தவர்களே.

அமெரிக்காவில் ஒரு ராஜ்யத்தின் தலைமை நீதி மன்றத்தைப் பற்றிய எல்லா முடிவும் அந்த ராஜ்ய அரசாங்கத்தாரால் மட்டுமே செய்யப்படும். இந்தியாவிலோ, நீதி மன்றத்தைப் பற்றிய மேலதிகாரம் மத்திய ஆட்சியிடமே உள்ளது. மைசூர் ராஜ்யத்து நீதிபதி ஒருவர் குடியரசுத் தலைவரால், குடியரசு ஏற்பட்ட பத்தாம் நாளிலேயே நீக்கப்பட்டதொன்றே இதற்கு சான்று.

அமெரிக்கா முழுமைக்கும் ஓர் அரசியல் சட்டம் இருப்பது போலவே, ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் தனித்தனியே ஓர் அரசியல் சட்டம் வகுக்கப்பட்டிருப்பதும் அமெரிக்காவில் ஒரு தனிச் சிறப்பு. ராஜ்ய அரசியல் சட்டத்தில் அந்த ராஜ்யத்து மக்களுடைய உரிமைச் சாசனமும், அரசியல்

அமைப்பின் விவரமும், குற்ற வாளிகளைத் தண்டிக்கும் முறையும், ஸ்தல ஸ்தாபனங்களுக்கான சட்ட திட்டங்களும், வியாபாரக் குழுக்களும் தர்ம ஸ்தாபனங்களும் என்னென்ன வரையறைகளுக் நடைபெறலாம் என்ற அடிப்படைக் கொள்கைகள் அடங்கியிருக்கும்.

சுருங்கச் சொன்னால், அமெரிக்காவில் மக்களின அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கும் எல்லா நிகழ்ச்சிகளும் சமஷ்டியின் தலையீடின்றி ராஜ்யத்தாலேயே நிகழ்த்தப் பெறும். அதற்குஉறவாயுள்ள அதிகாரங்கள் அனைத்தும் ராஜ்ய அரசாங்கத்துக்கே உண்டு.

அமெரிக்காவில் ஒரு ராஜ்யம் பல சிறு ராஜ்யங்களாகப் பிரிக்க நேரிடின், அதை அமெரிக்க சமஷ்டி அரசாங்கத்தார் தடை செய்யலாகாது என்ற கொள்கை ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. சான்ருக, டெக்சாஸ் என்ற ராஜ்யத்தின் சட்ட சபை முடிவு செய்தால் அந்த ராஜ்யம் மூன்று அல்லது நான்கு ராஜ்யங்களாகப் பிரிக்கப்படும் என்பதற்கு அமெரிக்க சமஷ்டி அரசாங்கத்தார் பல ஆண்டுகளுக்கு முன்பே உடன்பட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கது.

இந்தியாவில் ஒரு ராஜ்யத்தை, அவசியத்தை முன்னிட்டு பல ராஜ்யங்களாகச் செய்வதற்கு அரசியல் அமைப்பு அங்கீகாரம் தருகிறது. ஆனால், அப்படிப் பிரிக்கும் உரிமை மத்திய அரசுக்குத்தான் உண்டு; ராஜ்யங்களுக்குக் கிடையாது.

இவ்வாறெல்லாம் ராஜ்யங்களுக்குத் தனி அந்தஸ்து அமெரிக்காவில் இருப்பதற்குக் காரணம், சில ராஜ்ய அரசாங்கங்கள் குடியரசுக் கட்சியாரிடமும், சமஷ்டி அரசாங்கம் ஜனநாயகக் கட்சியாரிடமும் இருந்து வருவதே யாகும். இதனால் ராஜ்யங்களின் உரிமைகளைப் பாதுகாக்கப் பல ஆண்டுகளுக்கு அமெரிக்காவில் சொற்போரும் நிகழ்ந்ததுண்டு. இந்தியாவில் இப்போது எல்லா ராஜ்யங்களும் இந்திய அரசாங்கத்தைப் போலவே காங்கிரஸ் கட்சி ஒன்றினிடம் மட்டுமே இருப்பதால் ராஜாங்க—மத்திய அரசாங்கங்களுக்கிடையே தகராறு ஏற்படுவதில்லை. ராஜாங்கங்கள் இந்திய அரசாங்கத்தின் "ஆமாம்—சாமிகள்" ஆக உள. வருகின்ற தேர்தலில், ஏதாவதொரு ராஜ்யத்தில் சோசலிஷ்ட் கட்சியோ, காங்கிரஸ் அல்லாத வேறொரு கட்சியோ சட்ட சபையைக் கைப்பற்றினல், நம் நாட்டிலும் ராஜ்யங்களின் உரிமைப் போர் தொடங்கும்.

## ராஜ்யங்களின் அதிகாரங்கள்

இப்போது இந்தியாவிலுள்ள ராஜ்யங்களுக்கு பிரிட்டிஷார் ஆல், 1937-ல் மாகாண சுய ஆட்சி கொடுக்கப் பட்டபோது மாற்றப்பட்ட அதிகாரங்கள் 'ஒரணா சுயராஜ்ய' கூட இல்லை என்று கூறப்பட்டது. ஆனால், நம் நாட்டினரே அமைத்துள்ள அரசியல் சட்டத்தில், ராஜ்யங்

களுக்கு அந்த 'ஓரண சுயராஜ்யங் கூடக் கொடுக்கப்படவில்லை.

இப்போது அமெரிக்காவில் ராஜ்யங்களுக்குள்ள அதிகாரங்களைக் கவனிப்போம்:

அமெரிக்க ராஜ்யங்கள், சமஷ்டி அரசாங்கத்துக்குச் சில உரிமைகளை விட்டுக் கொடுத்துள்ளன; 'எஞ்சிய அதிகாரங்கள்' எல்லாம், ராஜ்யங்களையே சேரும். இந்திய அரசியல் சட்டத்தில், 'எஞ்சிய அதிகாரங்கள்' மத்திய அரசுக்கே உரிமையாக்கப் பட்டுள்ளன.

அமெரிக்காவில், ஒரு ராஜ்யத்துக்குள் செல்லும் எல்லாவித போக்கு வரத்தும்—ரெயில்வே, ஆகாயவிமானம் உள்பட ராஜ்ய அரசாங்கத்தாரிடமே இருக்கிறது. சொத்துரிமை சம்பந்தமான சட்டம் செய்வதும் ராஜ்ய சட்ட சபைதான். வியாபாரம், 'தொழில் ஆகியவைகளைப் பாதிக்கும் சட்டங்கள் ராஜ்ய சட்ட சபையிலேயே இயற்றப்படுகின்றன. மின்சாரம், டெலிபோன், தந்தி, பேங்குகள், இன்சூரன்ஸ் கம்பெனிகள், கால்வாய்கள் ஆகியவையும் ராஜ்ய அதிகாரங்களே. தனிப்பட்டவரின் ஜீவாதாரமான உரிமைகளைப் பேணுவதும் ராஜ்ய அரசாங்கத்தாரின் பொறுப்புதான்.

காடுகளின் நிர்வாகம், சுரங்கங்களிலும் மற்ற இடங்களிலுமுள்ள உலோகப் பொருள்களை பேணுவது, எண்ணெய் பெட்ரோல், நிலக்கரித்தொழில்களைக் கட்டுப்படுத்துவது, முதலியவையும் ராஜ்ய அதிகாரப் பட்டியலிலேயே சேர்க்கப் பட்டுள்ளன.

விவாகம், விவாக ரத்து பற்றிய சட்டங்களும் ராஜ்யங்களால் மட்டுமே செய்யப்படுகின்றன. இதனால், ராஜ்யங்களில் மணம் செய்து கொள்ளுவதற்கான வயது எல்லையின் கீழ்வரம்பும், காதலர்கள் மணம் முடிப்பதற்குள் அரசாங்கத்துக்கு அறிவிக்க வேண்டிய காலஅளவும் ராஜ்யத்திற்கு ராஜ்யம் வேறுபட்டதாக இருக்கின்றன. வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தவிர்ப்பதற்கான ஏற்பாடுகளையும் ராஜ்ய அரசாங்கங்களே செய்கின்றன. குற்றவாளிகளுக்குத் தண்டனை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதும் ராஜ்யங்களின் விருப்பத்தைப் பொருத்ததே. நியூயார்க் ராஜ்யத்தில், மரண தண்டனை மின்சார சுவிட்ச் மூலம் நிறைவேற்றப்படுகிறது; உட்டா ராஜ்யத்தில் மரண தண்டனை அடைந்தவர்கள் சுடப்படுகின்றனர்; நியூஹாம்ப்ஷயர் ராஜ்யத்தில் தூக்கி விடப்படுகின்றனர்; விஸ்கான்சின் ராஜ்யத்தில் ஜீவாந்தர சிறை தண்டனை மட்டுமே உண்டு. குற்றவாளிகளுக்கு கருணை காட்டி மன்னிப்பு அளிக்கும் உரிமையும் பெரிய பதவிகட்கு அதிகாரிகளை கள் நியமிக்கும் சலுகையும் நம் நாட்டில் குடியரசுத் தலைவருக்குத்தான் உண்டு. அமெரிக்காவிலோ ராஜ்ய கவர்னருக்கும் உண்டு.

## வரிவிதிக்கும் உரிமைகள்

இந்திய அரசியல் சட்டப்படி, நமது நாட்டிலுள்ள ராஜ்யங்

களுக்கு செலவினங்கள்—கல்வி சுகாதாரம், மதுவிலக்கினல் ஏற்படும் வருவாய்க் குறைவு, ரஸ்தா நிர்மாணம், விவசாயம்—யாவும் கொடுக்கப்பட்டுள்ளன. வருவாய் தரும் இனங்களாகிய மரண வரி, சுங்க வரி, வருமான வரி, எக்சைஸ் வரி, உப்பு வரி, கார்பரேஷன் டாக்ஸ், ரயில்வே, தபால்-தந்தி இனங்கள் எல்லாம் யூனியன் அரசாங்கத்தாரைச் சேர்ந்தவை.

அமெரிக்காவில் வரி விதிப்பு அதிகாரம் எவ்வாறு பிரிக்கப்பட்டிருக்கிறது என்பதை கவனிப்போம்.

வருமான வரி, மரண வரி ஆகியவை. ராஜ்ய அரசாங்கத்தாரால் கவனிக்கப்படுகின்றன. ஆனல், இந்த இரண்டு வரிகளையும் ஒவ்வொரு நபரும் ராஜ்ய அரசாங்கத்துக்கும்; சமஷ்டி அரசாங்கத்துக்கும் தனித்தனியே (அந்தந்த அரசாங்கங்கள் விதிக்கும் விகிதப்படி) கட்ட வேண்டும்.

அமெரிக்க சமஷ்டி அரசாங்கத்தார் மட்டுமே வசூலிக்கும் மற்ற வரிகள் வருமாறு:—எக்சைஸ் வரி, இறக்குமதி வரி (அமெரிக்காவில் ஏற்றுமதி வரியே இல்லை), கம்பெனி வரி (இது கம்பெனியின் மூலதனத்தைப் பொறுத்து விதிக்கப்படுகிறது), கம்பெனி நகைகள் வாசனைத் திரவியங்கள் மீது விற்பனை வரி; கம்பெனிப் பங்குகள் கடன் பத்திரங்கள் மீது வரி, பனமா கால்வாய் வழியாகச் செல்லும் கப்பல்களுக்கு வரி ரேடியோ நிலையம் நடத்துபவர்களுக்கு லைசென்சு கட்டணம், (நம் நாட்டில் சினிமா தியேட்டர்கள்செலுத்துவதைப்போல) ரயில் நடத்தும் கம்பெனிகள் தாம் விற்கும் ரயில் டிக்கட்டுகளின் விலையின் மீது 15 சதவிகித வரி.

அமெரிக்க ராஜ்யங்கள் விதிக்கும் வரிகள் வருமாறு:—சொத்து வரி, விளம்பரங்கள் மீது வரி தொழில் வரி, சொந்த வியாபாரத்துக்காக அரசாங்க இடங்களை பயன் படுத்துவதற்கு வரி, பெட்ரோல் வரி, மொத்த வியாபாரிகள் மீது விற்பனை வரி, டோல்கேட் வரி. இவை தவிர வருமான வரி, மரண வரி மூலமும் அமெரிக்க ராஜ்யங்களுக்கு பெரும் வருவாய் கிடைக்கிறது.

மேல் கண்டவை நீங்கலாக, ராஜ்யங்கள் தங்களுடைய பின் வரும் வரி விதிக்கும் உரிமைகளை நகர சபைகளுக்குக் கொடுத்திருக்கின்றன:- தமஷாவரி, கல்யாணவரி, மோட்டார்வரி, நாய் வைத்துக் கொள்ள லைசன்சு வரி, வேட்டையாடவும் மீன் பிடிக்கவும் லைசன்சு வரி, மதுவும் மற்றும் சில பொருள்களும் விற்கும் கடைகளுக்கு லைசென்சு வரி.

இவை தவிர, அமெரிக்க நகர சபைகள் தத்தம் எல்லையிலுள்ள தொழிலாளர்களின் சம்பளத் தொகையிலிருந்து ஒரு சிறு பகுதியைப் பிடித்தம் செய்து இந்த தொகையி லிருந்து அத் தொழிலாளர்கள் வேலையில்லாமல் இருக்க நேரும்போது அவர்களுக்கு நஷ்டஈடு கொடுக்கிறார்கள். நகரத்துக்குள் செல்லும்

## ஆசிரியருக்குக் கடிதம்

நாகர்கோயில்
17—3—50

அன்பார்ந்த ஐயா, அண்மையில் குமரி முனையில் நடைபெற்ற எல்லை மாநாட்டிற்கு வந்து சென்ற பிறகு நாங்கள் ஒன்றுமே செய்யவில்லை. செய்ய வேண்டுமென்று எண்ணம் எங்களுக்கு நிறைய உண்டு. ஆனால், செய்யத் தூண்டும் சூழ்நிலை இல்லை. மக்களாயினும் சரி; மாணவர்களாயினும் சரி; 'முரசு' ஒலிக்காத நிலையில், கடமையைச் செய்ய களிப்புதோன்றுவதெங்ஙனம்?

நமது அணிவகுப்பை சரிவர அமைக்கு முன், மக்களிடை சென்று எவ்வாறு பிரசாரம் செய்வது எனத் தெரியாது திகைக்கின்றோம். நம்மிடையே தினசரிப் பத்திரிகை யில்லை. நூற்றுக்கணக்கான பதிப்புகளும் இல்லை. அமைப்பு கூட போதியளவு வலுப்பெறவில்லை. இத்தனை பலவீனங்களுக்கு இடையேயும் கூட, கடந்த மூன்று ஆண்டுகளில் பிறர் செய்து காட்டாத அளவுக்கு மக்கள் நரம்புகளிலே தமிழ் இரத்தத்தைப் பாய்ச்சி புத்துணர்ச்சி ஏற்படச் செய்தது தமிழரசுக் கழகம். இதற்குக் காரணம், 'முரசு' முழங்கியது தான். மலர் வேண்டுமென்றால், பூஞ்சோலை வேண்டும். முரசு தான் அந்தப் பூஞ்சோலை. 'முரசு' இல்லாமல் நாங்கள் எவ்வளவுதான் பணிபுரிந்தாலும் மக்கள் விழிப்புற மாட்டார்கள். இருந்தாலும் எம் கழகத்து மாணவர்கள், கிடைத்திருக்கும் கோடை விடுமுறையை தமிழரசுப் பிரசாரத்திற்குப் பயன்படுத்த தீர்மானித்திருக்கிறோம். முரசு எப்போதுமுழங்குமோ?

சி. ஜி. எஸ். மணிவர்மன் தலைவர்
தலைவர்
தமிழரசு மாணவர் கழகம்.

**குறிப்பு:**-இம்மாணவர் போன்றே முரசு இடைவிடாதுஒலிக்க வேண்டும்; கழகம் வகுத்த திட்டம் வெற்றிபெறவேண்டும் என 'முரசு' நின்றிருந்த மாதங்களில் நமக்கு கடிதமெழுதிய தோழர்கள் கணக்கிலர். அவர்கள் விருப்பத்தைநிறைவேற்ற முடிந்ததற்கு மகிழ்கின்றோம். —ஆசிரியர்.

---

ரயில் போக்குவரவையும் பல அமெரிக்க நகர சபைகள் நடத்துகின்றன. அமெரிக்காவில் பெரிய துறைமுகங்கள் எல்லாம் அந்தந்த நகரசபையைச் சேர்ந்தவையே. இந்தியாவிலோ, 'ராஜ்யங்கள்' கூட உள்ளூர் ரயில் போக்குவரவிலோ, துறைமுக விவகாரங்களிலோ தலையிட முடியாது! ராஜ்யங்களின் அதிகாரங்கள் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகின்றன. ராஜ்யங்களையே எடுத்துவிடலாம் என்று சொல்லுமளவுக்கு மனு சுபேதார் என்ற பார்லிமெண்டு அங்கத்தினர் துணிந்து விட்டார். இக்கருத்தையே திரு. சி. ஆர். ரெட்டி பின்வருமாறு கூறுகிறார் ;— "ராஜ்யங்களின் செல்வாக்கு தேய் பிறைச் சந்திரனைப்போல் இருக்கிறது. விரைவில் அமாவாசை கூட ஏற்பட்டுவிடலாம்" அந்த அமாவாசை நிறைமதியாக மாற்றும் ஆற்றல் மக்களிடமே உளது.

# வள்ளுவர் வகுத்த வழி

'ஞானம்'

திருவள்ளுவர் இயற்றிய முப்பால் கொண்ட திருக்குறளில், இரண்டாவதாக வைக்கப்பட்டுள்ள பொருட்பால், அரசு நெறிகளை அறிவிப்பதாகும். ஒரு நாட்டின் அரசியலை அமைக்க விரும்புவோருக்கு பொருட்பால் நல்ல வழிகாட்டியாக இருக்கிறதெனலாம். திருவள்ளுவர், அரசியலில் அடிக்கடி மாறக் கூடிய தன்மை வாய்ந்த விஷயங்களில் கருத்து செலுத்தாமல் என்றென்றும் மாறுமல் நிற்கும் நெறிகளையே போதிக்கின்றூர்.

பொருட்பால் கூறும் அரசு, அரசனையே தலைவனுகக் கொண்டு இயங்குகிறது. என்றூலும், அரசனது உரிமைகளைக் கூறுமல், அவனது கடமைகளை மட்டுமே வற்புறுத்துகின்றது. ஆகவே, வள்ளுவர் வகுத்த அரசு முறை முடியரசுக்கேயன்றி, குடியரசுக்கும் பொருந்தக் கூடியதாக இருக்கிறது. முடியரசுக்கும், குடியரசுக்கு முள்ள வேற்றுமை யெல்லாம் ஆளுவோரின் உரிமையைப் பொறுத்ததே யன்றி, கடமையைப் பொறுத்ததல்ல. கடமை எல்லா அரசுக்கும் ஒன்று போலத்தான்.

மேலும், முடி மன்னன் இல்லாத நாடுகளிலும், 'குடியரசுத் தலைவர்', 'சர்வாதிகாரி', 'கவர்னர்--ஜெனரல்', 'ஜனுதிபதி' என்ற பெயர்களுடன் தனி மனிதர்களே அரசாங்கத் தலைவர்களாக இருந்து வரக் காண்கிறேம். ஆகவே, திருக்குறளில் வரும் அரசனை, 'அரசாங்கத் தலைவன்' என்று கருதுவோமானல், பொருட்பால் போதிக்கும் அரசியல், உலக நாடுகள் அனைத்திற்கும் பொருந்துவதா யிருப்பதை புரிந்து கொள்ளலாம்.

## அரசன் கடவுளா?

அரசன் கடவுளின் அம்சம் என்பது திருவள்ளுவர் காலத்து மக்களின் நம்பிக்கை. இதை வள்ளுவர் மறுக்கவில்லை என்றூலும், மாற்றி அமைக்கிறூர்.

முறைசெய்துகாப்பாற்று மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்

"மக்களுக்கு குறை நேராமல் முறை செய்து காக்கும் செங்கோலனே 'இறை' யெனப்படுவான்" என்பது

இந்தக் குறளின் பொருள். இதில், குடிமக்களுக்கு நீதி வழங்கத் தவறிய கொடுங்கோலர்கள் 'இறை' எனப் படமாட்டார்கள் என்ற பொருளும் தொக்கி யிருக்கிறதல்லவா? ஆம்; மன்னனைக் கடவுளாக்கியவர்கள், அதை பிறப்பு வழிப்பட்ட சிறப்பாகவே கருதினர். ஆனால், வள்ளுவரோ, செயலை யொட்டிய சிறப்பாகவே இருக்க வேண்டுமென்று திருத்தங் கண்டார்.

## மன்னனும் தவறு செய்வான்

'மன்னன் தவறு செய்வதே இல்லை' என்ற மூடநம்பிக்கை உலகமெங்கும் முடிசூட்டி ஆண்ட காலத்தில் திருக்குறள் தோன்றியது. எனினும், 'மன்னன் தவறு செய்யக் கூடும்' என்ற அடிப்படையிலேயே திருக்குறள் அரசு அமைந்திருக்கிறது. 'செங்கோன்மை' என்ற அதிகாரத்தை யடுத்தே 'கொடுங்கோன்மை', 'வெருவந்த செய்யாமை' என்ற அதிகாரங்களை வைத்திருப்பதே இதற்கு ஆதாரமாகும்.

திருக்குறள் அரசியலில் முடியாட்சி முறை அங்கீகரிக்கப்பட்டாலும், அதற்கும் ஒரு முடிவு உண்டு என்பதைத் தெளிவாக்குகின்றது திருக்குறள்.

**இறைகடியன் என்றுரைக்கும்**
**இன்னச்சொல் வேந்தன்**
**உறைகடுகி யொல்லை கெடும்**

என்ற குறள், தனியொரு கொடுங்கோலனின் அழிவை மட்டுமன்றி, வழி வழி கொடுங் கோலரைத் தோற்றுவிக்கும் அரச பரம்பரையின் அழிவையும் அறிவிப்பதாகும்.

## சமயச் சார்பற்ற அரசு

குறளாசிரியர் கூறும் அரசு சமயச் சார்புடையதன்று. சமயங்களை ஆதரிப்பதோ, எதிர்ப்பதோ அரசாங்கத்தின் கடமையாக இருக்கக் கூடாதென்பதே வள்ளுவர் கருத்தென்பதை.

**அந்தணர் நூற்கும் அறத்திற்கும்**
**ஆதியாய்**
**நின்றது மன்னவன் கோல்**

என்ற குறளால் அறிகிறோம். அந்தணர் யாத்த ஒரு வழிப்பட்ட சமய சாத்திரங்கட்கும், அறம் வளர்க்கும் அமைப்புகளெனப்படும் சமயங்கட்கும் அப்பாற் பட்டது அரசு என்பதே இக்குறளின் பொருள். மற்றும், 'ஆதியாய் நின்றது மன்னவன் கோல்' என்பதால், சமயங்களும், சாத்திரங்களும தோன்றுவதற்கு முன்னரே, அரசு தோன்றியதென்ற உண்மையையும் இக்குறள் நமக்கு உணர்த்துகிறதெனலாம்.

திருவள்ளுவர் கடவுள் எதிர்ப்புக் கொள்கை யுடையவர் அல்

லர். ஆனால், 'எல்லாம் அவன் செயல் என்ற நம்பிக்கையில் மூழ்கி கடமையை மறக்கும் மக்களுக்கு,

தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்

என்று உழைப்பின் முக்கியத்துவத்தை வற்புறுத்துகிறார். ஆம்; கடவுளின் பெயரால், சமயத்தின் பெயரால், சமூக சேவையை மறுப்பவர்கள், வள்ளுவர் அரசில் வாழ முடியாது. பொருட் பாலில் சமூக இயல்களுக்கே முக்கியத்துவம் தருகிறார் வள்ளுவனார். வெறும் நம்பிக்கை யளவுள்ள சமயக் கொள்கைகளை அவர் இரண்டாந்தரமாகவே கருதுகிறார்.

வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்

என்ற குறளில், 'விண்ணுலகத் தேவர்' களோடு வாழ்வதைவிட மண்ணுலக மாந்தர்களோடு வாழத் தெரிந்து கொள்வதே சிறந்த தென்பதை வற்புறுத்துகிறார். அப்படியே, 'மேலுலகம் இல்லெனினும், ஈதலே நன்று' என்று கூறுமிடத்தும், இதையே வற்புறுத்துகிறார். திருக்குறளோடு பொருத்தப் பட்டுள்ள நான்கு அதிகாரங்களைக் கொண்ட பாயிரத்தைத் தவிர ஏனைய மூன்று பால்களிலும் வரும் குறட்பாக்களை ஆராயுமிடத்து திருவள்ளுவர் காணும் லட்சிய அரசு இன்றைய உலகின் முற்போக்காளர்கள் எல்லோரும் ஒப்புக்கொள்ளத் தக்க தென்பதைஉணரலாம்.

## ஆயுதம் ஏந்தும் உரிமை அரசுக்கே

திருக்குறள் அரசில், உட்பகை புறப்பகைகளிலிருந்து, மக்களைக் காக்கும் பொறுப்பு அரசுக்கே உரியதாதலால், தனி மனிதன் ஆயுதம் தாங்கும் உரிமை அங்கீகரிக்கப்படவில்லை. தனி மனிதர்களுக்குள் பகை நேரும்போது ஒருவரை யொருவர் வெற்றி கொள்ளும கருவி அன்பேயன்றி ஆயுதம் அல்ல என்பதை திருக்குறள் அழுத்தம்திருத்தமாகக் கூறுகிறது.

இன்னா செய்தாரை ஒருந்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்

என்ற குறள் இதற்கு சான்று. காந்தியடிகள், ஆயுதம் தாங்காத அரசாங்கத்தை அமைக்கவே தம் ஆயுட்கால முழுவதும் பாடுபட்டார். அது போன்றே திருக்குறள் இயற்றிய வள்ளுவரும் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே,

வேலன்று வென்றி தருவது மன்னன்
கோலதூஉம் கோடா தெனின்

என்ற குறலில் கோல் கோடாத ஆட்சிக்கு அமைதியை நிலைநாட்ட ஆயுதம் அவசியமில்லை என்றே கூறுகிறார். ஆனால், அந்த லட்சிய அரசு உலகமெங்கும் அமைந்தாலொழிய ஆயுதத்தின் அவசியத்தை அலட்சியப்படுத்துவதற்கில்லை யல்லவா? ஆகவே, குறள் அரசு பகைவர்களை வெல்ல, படைகளை வைத்திருக் உரிமை பெற்றிருக்கிறது.

---

# பிரிவதுதான் வாழ்வதற்கு வழி

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை.

○

இதுவோர் புரட்சிக் காலம். சிறிது காலத்துக்குள் எத்தனை யெத்தனை மாறுதல்களைக் கண்ணுல் பார்த்து விட்டோம்! பாரத தேவியின் நெஞ்சை வகிர்ந்தது போல் பாகிஸ்தான் ஏற்பட்டுத் தனி நாடாகப் பிரிந்து போனதைப் பார்க்கவில்லையா? மகுடங்களெல்லாம் தகர்ந்து மறைந்து போனதைப் பார்க்கவில்லையா? பன்னூருண்டுகளாகச் சேர்ந்திருந்த நாடுகள் பிரிகின்றன; பிரிந்த நாடுகள் சேர்கின்றன. முடியாட்சி நீங்கிக் குடியாட்சி ஓங்கும் இக்காலத்தில் மக்கள் சாதி சமய வேறுபாடுகளை ஒழித்து, மொழியால் ஒன்றுபட்டு வாழ்வதற்கு வகையேற்படுவது இன்றியமையாதது. அதற்காகவே தெலுங்கர்கள் ஆந்திர மாகாணம் கேட்கிருர்கள். கன்னடர்களும் பிரிந்து போக விரும்புகிருர்கள். கேரளீயர்களும் தனி மாகாணத்துக்கு அரும்பாடு படுகிருர்கள். திருவிதாங் கோட்டிலும், செங்கோட்டையிலும், தேவிகுளத்திலும், பீருமேட்டிலும் வாழும் தமிழர்கள் தங்களிடங்களையும் தாய்த் தமிழ் நாடோடு சேர்க்க வேண்டுமென்றுகேட்கிருர்கள்.

இவ்வேளையில், எந்தெந்த மொழியாளர்கள், அண்டையிலுள்ள தம் தாய்மொழிப் பகுதியோடு சேர விரும்பினுலும் அவர்களைப் பிரித்தும் சேர்த்தும் ஒற்றுமையாய் வாழத் துணை செய்வதுதான் பொதுநோக்கங் கொண்ட சிறந்த அரசியல் தலைவர்களின் கடமையாகும். இதற்காகச் சரித்திரமும், புராணமும், சாசனமும், இலக்கியமும் புரட்டிப் பார்க்க வேண்டிய தேவையில்லை.

சில அரசியல் நிபுணர்கள் நாடுகளைப் பிரிக்கவோ சேர்க்கவோ வேண்டுமென்றுல் பொருத்தம் பார்க்கத் தொடங்கி விடுகிருர்கள். மக்களின் விருப்பத்தை மட்டும் கவனித்தால் போதாதாம். சரித்திரப் பொருத்தம், பூமிநூல் பொருத்தம், பொருளாதாரப் பொருத்தம், கலாசாரப் பொருத்தம், மொழிப் பொருத்தம், மதப் பொருத்தம் முதலிய பொருத்தங்கள் ஒத்துவரவேண்டுமாம். ஆனுல் இன்று உருவாகியிருக்கும் சமஸ்தான யூனியன்கள் அனைத்தும் ஒத்து வந்திருப்பதுண்டா?

திருமணத்துக்குச் சோதிடர்கள் பொருத்தம் பார்ப்பதுண்டு. நட்சத்திரப் பொருத்தம், கணப் பொருத்தம், மகேந்திரப்பொருத் பொருத்தம், யோனிப் பொருத்தம், ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம், இராசிப் பொருத்தம், இராசி அதிபதிப் பொருத்தம், வசியப் பொருத்தம்; வேதைப் பொருத்தம், சரட்டுப் பொருத்தம் என்று பத்துப் பொருத்தம் சொல்வார்கள். இந்தப் பத்துப் பொருத்தங்களும் ஒத்துஇணைந்த மணமக்கள் ஆயிரவரில் எத்தனை பேர் இருக்க முடியும்? மனப் பொருத்தம் ஒன்றுதான் வேண்

டியது. மனப் பொருத்தமில்லாமல் மற்றப் பொருத்தங்கள் எல்லாம்இருந்தும் பயனில்லை. மனப் பொருத்தமிருந்து மற்றப் பொருத்தங்களில்லாமற் போனாலும் பாதகமில்லை. இதை உலகில் நாம் கண்கூடாகக் காண்கிறோம். ஆதலால் சோதிடர்கள் பொருத்தங்கள் கூறிச் செப்பிடு வித்தை காட்டும் முறையைத் தாமும் கையாளாமல் அரசியல் தலைவர்கள் நேர்மையாக நடந்துகொள்ள வேண்டுமென்பது என் ஆசை.

'பிரிவினைக்கேற்ற காலம் இதுவல்ல; அதற்கு அமைதியான சூழ்நிலை வேண்டும்.' என்று பெரிய அரசியல் தலைவர்கள் சொல்லுகின்றார்கள். உலகப் போக்கை உற்றுப் பார்த்தால் அமைதி அண்டையி லிருப்பதாகத் தெரியவில்லை. உலகில் என்றும் கொந்தளிப்பும் குமுறலும் இருநது கொண்டுதான் இருக்கும். அந்த உலகச் சுழற்ச்சிக்குள் அகப்பட்டுக் கிடக்கும் நம் பாரத தேசம் போன்ற ஒரு பெரிய தேசத்திலும் அத்தகைய சில்லறைச் சண்டைகளும் சச்சரவுகளும் குழப்பங்களும் அடிக்கடி ஏற்பட்டுக்கொண்தானிருக்கும். அவை நீங்கியபின் பிரிக்கவோ சேர்க்கவோ செய்யலாமென்பது திரை நீங்கித் தீர்த்தமாடலாமென்று சொல்வதற்கு சமமாகுமே தவிர வேறல்ல.

நான்கு சகோதரர்களுள்ள ஒரு குடும்பத்தில் சொத்துப் பிரிவினை நடைபெறுகிறதென்று வைத்துக் கொள்வோம். சொத்தினை ஒரே சமயத்தில் நால்வர்க்கும் பகிர்ந்து கொடுப்பதுதான் முறை; சௌகரியமும் அதுதான். ஒவ்வொருவருக்காகப் பிரித்துக் கொடுக்கத் துணியும் போது, ஒரு முறைக்கு மூன்று முறை துன்பமும் குழப்பமும் விக்க நேரும். அத்தகைய நிலை ஏற்படாமல் ஒரு கமிட்டி ஏற்படுத்தி ஏக காலத்தில் தென்னாட்டு மொழிவாரி மாகாணங்கள் நான்கையும் அமைத்துவிடுவதுதான் நலமென்று கருதுகிறேன். இந்த எண்ணம் நம்மேல் இடத்தாருக்கு உண்டாகாமல் இருப்பது நம்கஷ்டகாலம்என்றுதான் சொல்ல வேண்டும்.

இப்பொழுது நாம் சுதந்திரம் பெற்றிருக்கிறோம். நம் நாடு குடியரசு நாடாகப் போகிறது. இனி வயது வந்தோர்க் கெல்லாம் வாக்குரிமை யுண்டு. வாக்குரிமையுடைய ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு மன்னனாகின்றான். ஆதலால் அவன் அபிப்பிராயத்துக்கு விலையுண்டு; மதிப்புண்டு. அவ்வபிப்பிராயங்கள் ஒரு முகப்பட்டாது பல்வேறு வகையாகப் பிளவு படும் போது பெரும்பான்மை, சிறுபான்மை முறை கையாள வேண்டியதாகின்றது. இது நடைமுறைக்கு உகந்த நல்ல முறைதான். ஆனால் அதிகாரத்துக்கு வந்த பெரும்பான்மைக் கட்சியினர் சிறுபான்மையோரின் நலத்துக்கு ஊறு செய்து, அவர்கள் கூக்குரல் வெளிக்கிளம்ப ஒட்டாமல் தடுத்து அவர்களை அடக்கி ஒடுக்கி மிதித்து வைப்பதற்கும் இது உதவக் கூடும். பெரும்பான்மையினர் எனப்படுவோர் இந்த வகைக்குத் தம் அதிகாரத்

# தம்பிக்கு



டாக்டர். மு. வரதராசனார்

அன்புள்ள எழில்:

நீ எழுதிய கடிதங்கள் எனக்கும் சுவையாக இருந்தன. அன்னைக்கு எழுதிய கடிதங்களை அண்ணன் எப்படிப் பார்த்தான் என்று நீ எண்ணி வியப்பு அடையலாம். உன் கடிதங்கள் அன்னைமட்டுமல்லாமல் அண்ணனும் படிக்க வேண்டிய கடிதங்கள்தான்.

அன்னையைக் கேட்டுதான் படித்தேன். "எழில் எழுதியவை" என்று எழுதி அவற்றையெல்லாம் ஒரு கட்டாகக் கட்டி அன்னை பீரோவில் வைத்திருந்தார். "இது என்னமா?" என்று கேட்டேன். உன் கடிதங்கள் என்று சொல்லி, "நீயும் படிக்கலாமே" என்றார். பிறகுதான் படித்துப் பார்த்தேன். நீ ஒன்றும் கவலைப் படாதே. நானும் உன் கருத்து உடையவனே. நீ வயதில் இளையவன். அஞ்சாமல் உன் கருத்தைச் சொல்கின்றாய்; எழுதுகிறாய். நான் உன்னைவிட உலக அனுபவம் மிகுந்தவன்; அதனால் உலகத்தைப் பற்றிய அச்சமும் மிகுந்தவன் ஆகையால்எதையும் சொல்லவும் எழுதவும் தயங்குகிறேன்; நீ உள்ளத்தில் உணர்ந்ததைக் கொட்டுகிறாய்; நான் உணர்ச்சி இல்லாதவன் போல் நடிக்கிறேன். இதுதான் வேறுபாடு; நீயே என்னைவிட ஒரு வகையில் நல்லவன்.

நல்லவனாக இருந்தால் மட்டும் போதாது. வல்லவனாகவும் இருக்க வேண்டும் அல்லவா? நன்மை வன்மை இரண்டும் இருந்தால்தான் இந்த உலகில் வாழ்க்கை உண்டு. நல்ல தன்மை மட்டும் உடையவர்கள் எத்தனையோபேர் கலங்கிக் கண்ணீர் வடித்து மாய்ந்திருக்கின்றார்கள்; மாய்ந்து வருகின்றார்கள். வல்லமைமட்டும்பெற்றவர்களும்

---

தைப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. அது பெரும் பாதகமானது: ஆபத்தானதும்கூட. ஆதலால் ஆட்சியாளர்கள் சிறுபான்மையோர் பெரும்பான்மையோர் என்னும் பேதமின்றி யாவர்க்கும் ஒத்த நீதி வழங்கி, மனக் கசப்பைப் போக்கி, வளமுள்ள பல மாகாணங்களை அமைப்பார்களாக. அவையெல்லாம் வலிமை மிக்க தூண்களாக நின்று நம் பாரத சமுதாயத்தைத் தாங்கட்டும். இதற்கு வேண்டிய பொது நோக்கும் நேசப் பான்மையும் மக்களிடை உண்டாகட்டும்.

இவையன்றிக் கோட்டைக்குள் படை வெட்டும் நிலை ஏற்பட்டால் பெற்ற சுதந்திரம் வீணாகும்; பட்ட பாடும் பழுதாகும்.

எதிர்பாராத வகையில் நசுக்குண்டு அழிகிருர்கள். குடும்பங்கள் முதல் நாடுகள் வரையில் இதற்குச் சான்றுகள் காணலாம். தமிழ் நாட்டில் இருந்த பழங் காலத்து நல்லரசுகள் கலங்கி அழிந்ததை வரலாறுகளில் காணவில்லையா? ஜெர்மனி, ஜப்பான் முதலான வல்லரசுகள் அழிவுற்றதையும் கண்கூடாகக் காண வில்லையா? நல்ல மருமகளாக வந்து வாழத் தொடங்கிக் குடும்பத்தாரின் இன்னலைப் பொறுக்கமுடியாமல் தற்கொலையாலோ மன வேதனையாலோ மாண்ட கதைகளை ஊர்களில் கேட்டதில்லையா? மகனையும் மருமகளையும் விருப்பம் போல் ஆட்டிவைத்து வல்லமை பெற்ற மாமியார், சில ஆண்டுகளுக்குப் பின் வாயும் கையும் அடங்கி மூலை வீடும் வேளைக் கஞ்சியும் கிடைத்தால் போதும் என்று ஏங்கும் கதைகளையும் கேட்டதில்லையா? இந்த விதியை நாம் இனியும் மறந்து வாழக்கூடாது. தமிழர்கள் நல்லவர்களாக மட்டும் இருந்து தனித் தனியாகவும் குடும்பம் குடும்பமாகவும் நாடு நாடாகவும் அழிந்தது போதும். இனிமேல் வல்லவர்களாகவும் வாழக் கற்றுக் கொள்ள வேண்டும். நல்ல தன்மையோடு வல்லமையும் சேரப் பெற்று வாழ வேண்டும்.

தம்பி! இயற்கையி லிருந்து நாம் ஒரு பெரிய பாடம் கற்றுக் கொள்ள வேண்டும. வாழ்க்கைப் பகுதிகளில் ஒன்றை மட்டும் போற்றுகிறவன் உருப்படியாவதில்லை. உடலை மட்டும் போற்றி உரமாக வைத்திருப்பவனும் அழிகிருன்; அவனுடைய உள்ளம் அவனுக்குப் பகையாகி அவனைத் தீய வழியில் செலுத்திக் கெடுத்து அழிக்கிறது. உள்ளத்தை மட்டும் தூய்மையாக போற்றிக் காப்பாற்றுகிறவனும் இடைநடுவே அலலல்படுகிருன்; அவனுடைய உடல் பல நோய்க்கிருமிகளுக்கு இடம் கொடுத்து அவனுடைய உள்ளத்தின் அமைதியைக் கெடுத்து அல்லல்படுத்துகிறது. உடலும் வேண்டும், உள்ளமும் வேண்டும் என்று இரண்டையும் உரமாகவும் தூய்மையாகவும் காப்பதே கடமையாகும். மரம் வானளாவி உயர வேண்டியதாக இருக்கலாம்; ஆனல் தான் வேரூன்றிய மண்ணை மறந்து வாழ முடியாது; வானைப் புறக்கணித்துக் கிளைகளை உயர்த்தாமல் வாழவும் முடியாது. இந்த உண்மையை நன்ருக உணர்ந்தவர் திருவள்ளுவர். அறநெறியும் வேண்டும், பொருள் வளமும் வேண்டும், இன்ப வாழ்வும் வேண்டும் என்று உணர்த்தும் நூல் திருக்குறள்தானே? அறத்தை நினைந்து பொருளை மறக்கும்படியாகத் திருவள்ளுவர் கூறவில்லை. பொருளையோ இன்பத்தையோ போற்றி அறத்தை மறக்கும்படியாகவும் அந்தப் பெருந்தகை கூறவில்லை. உலகத்து நூல்களில் பலவற்றில் அறம் பொருள் இன்பம் மூன்றில் ஒவ்வொன்றை மட்டுமே வலியுறுத்தி யிருப்பதைக் காணலாம். வாழ்க்கையின் பல பகுதிகளையும் போற்றி வாழ வேண்டும் என்பதை உணர்த்த வந்த திருவள்ளுவர் இந்த மூன்றையும் தெளிவுறுத்தி யுள்ளார். தமிழராகிய நாம் திருவள்ளு

வரைப் பெற்றிருக்கிறோம்; திருக்குறளைப் பெற்றிருக்கிறோம். நம்மில் சிலர் அந்த நூலைக் கற்றும் இருக்கிறோம். ஆனால் திருவள்ளுவர் கூறியபடி வாழவில்லை; நல்ல தன்மை தேடுகிறோம்; வல்லமை தேடவில்லை. அதனால்தான் தாழ்வுறுகிறோம்.

நீ உடனே இதை மறுக்க முன் வரக்கூடும். அதற்கு முன்பே நான் காரணம் சொல்லி விளக்கி விடுகிறேன்.

தமிழ் மொழி நல்ல மொழிதான்; ஆனால் அதை வல்ல மொழியாக ஆக்கினோமா? பெரும்பாலோர் போற்றும் மொழியாக ஆக்கினோமா? இன்று எதை எடுத்தாலும் மக்கள் தொகையே வல்லமையாக வைத்துப் பேசப்படவில்லையா? தமிழ் மொழிக்கு அறிவுக்கலைகளில் செல்வாக்குத் தந்தோமா? நீதிமன்றங்களில் உரிமை நல்கினோமா? ஆட்சிக் கூடங்களில் வாழ்வு வழங்கினோமா? இல்லையானால் வெறும் பேச்சு ஏன்?

வல்லமை இல்லாத நல்ல தன்மை வாழாது தம்பி! அது பொருட்பால் இல்லாத திருக்குறள் போன்றதுதான்.

நம் முன்னோர் இதை மறந்த காரணத்தால், எத்தனையோ இழந்தனர்; ஒன்று சொல்லட்டுமா?

தமிழ்க் கலை நல்ல கலைதான்; அதிலும் யாழிசை நல்ல இசைதான்; ஆனால் வாழ்ந்ததா? இல்லை. ஏன்? முன்னே செல்வாக்கைப் பெற்றவர்கள் யாழைப் புறக்கணித்தார்கள்; பிறகு பொது மக்கள் மறந்தார்கள். இன்று தமிழுக்கும் ஏறக்குறைய அதே நிலை இருப்பதை எண்ணிப்பார்; உன் மனம் புண்படும்.

நீ இதை மறுக்கலாம். அன்று அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் என்ற நிலைமை இருந்ததை நீ எடுத்துக்காட்டலாம். இன்று பொது மக்கள் எவ்வழி அவ்வழியே ஆட்சியாளர் என்று எடுத்துக் கூறலாம்.

இப்படி உன்னை நீ ஏமாற்றிக் கொள்ள வேண்டாம் என்றுதான் உனக்குச் சொல்கிறேன். பொது மக்களின் விருப்பம் போல் ஆட்சி நடப்பதாகச் சொன்னால், பொது மக்கள் போரை விரும்புகிறார்களா, அணுக்குண்டையும் நீர்க்குண்டையும் விரும்புகிறார்களா, வேலையில்லாத் திண்டாட்டத்தை விரும்புகிறார்களா, குடியிருக்க வீடும் அறிவு வளர்க்க கல்வியும் உடல் வளர்க்கக் கஞ்சியும் இல்லாத கொடிய வறுமையை விரும்புகிறார்களா என்று மெல்ல எண்ணிப்பார். உனக்கே தெரியும்.

பொது மக்களுக்கு தங்கள் எதிர்காலத்தையும் நிகழ் காலத்தையும் சேர்த்து எண்ணித் தேவையை உணர இன்னும் தெரியவில்லை; அவர்கள் களிமண்ணாய்த் திரண்டு கிடக்கிறார்கள்; யார் யாரோ நீர் சேர்த்துப் பிசைந்து வேண்டியவாறெல்லாம் உருவங்களைச் செய்து கொள்கிறார்கள்.

சரி, நீ சொல்கிறபடியே பார்ப்போம். இன்று ஆட்சி எல்லாம் ஓட்டுப் போடும் மக்களின் கைகளைப் பொறுத்தது என்று வைத்துக் கொள்வோம். அவர்கள் ஓட்டுப் போடும் போது தங்களைப் பற்றியாவது தமிழ் நாட்டைப் பற்றியாவது தமிழைப் பற்றியாவது கவலைப் படுகிறார்களா? அவர்கள் கவலைப்படாத நாடும் மொழியும் யாருடைய வல்லமையை நம்பி வாழ முடியும்? வறுமையால் வாடும் அறிஞர் சிலருடைய துணை மட்டும் போதுமா?

நான் சொல்கிறபடியும் கொஞ்சம் பார். களிமண் பிசைகிறவர்களின் கைகளாவது நாட்டையும் மொழியையும் பற்றிக் கவலைப்படுவது உண்டா? அவர்களை மாற்றுவதற்காக, அல்லது அவர்களுடைய மனத்தில் நல்லெண்ணம் ஏற்படுவதற்காக, நீயும் நானும் ஏதாவது செய்தோமா? ஒன்றும் செய்யாமல், தமிழ் நாடும் தமிழும் வாழ்ந்துவிடும்என்று எண்ணிக்கொண்டு காலம் கழிப்பது குற்றம் அல்லவா? மறைந்துபோன அந்த யாழைப் பற்றியும் பழங் காலத்துப் பாணரும் விறலியும் பொருநரும் கூத்தரும் நம்மைப் போல்தான் ஏமாந்த எண்ணம் எண்ணிக் கொண்டு நல்லவர்களாக வாழ்ந்திருக்க வேண்டும். அந்த யாழை வாழ வைக்கும் வல்லமை பற்றி அவர்கள் எண்ணத் தவறியதால்தான் அந்த அருமையான கருவி அழிந்தது. அதை நினைத்துப் பார்க்கவும் இன்று ஒரு விபுலானந்தர் தேவையாகி விட்டது.

தம்பி! மேடையில் முழங்குவதைக் கொஞ்ச காலம் நிறுத்தி வைத்தாலாவது, இதை எண்ணிப் பார்க்க ஒரு வாய்ப்பு உண்டாகும் என்று எனக்குச் சில வேளைகளில் தோன்றுகிறது. இது பைத்தியக்கார எண்ணமாக உன் போன்ற இளைஞருக்குத் தோன்றலாம். ஆனால் அனுபவத்தால் சொல்கிறேன்; மேடை மகிழ்ச்சி நமக்குக் கடமை மறதியை உண்டாக்குகிறது. சிறந்த பேச்சு, நல்ல கைதட்டு இரண்டும் சேர்ந்தால் உணர்ச்சித் தணிவு, அடுத்தநிலை பழைய பிற்போக்கு வாழ்வு—இவைதான் இதுவரையிலும் கண்டவை. நம்மை எண்ணித்தான் திருவள்ளுவர் சொன்னாரோ என்னவோ தெரியவில்லை. நமக்காகவே சொன்னதுபோல் உள்ளது அந்தக் குறள். நம்மைப் பற்றி நாமே மகிழ்ந்து அந்த மகிழ்ச்சியில் மயங்கி யிருக்கும்போது, கடமையைப் புறக்கணித்துக் கெட்டழிந்தவர்களை நினைத்துக் கொள்ளவேண்டும் என்று வள்ளுவப் பெருந்தகை சொன்னது எவ்வளவு பொருத்தம்! மேடைப் பேச்சைக் கேட்டுக் கைதட்டும் கூட்டத்தைக் காணும்போதெல்லாம், "இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக" என்ற அந்தக் குறள் என் நினைவுக்கு வந்துவிடுகிறது, என்னை அறியாமல்.

தம்பி! இன்றைய உலகம வல்லமை மிகுந்த மாமியார் போல் உள்ளது. ஆனால் நம் அருமைத் தமிழகம் மிக நல்ல மருமகளாக உள்ளது. ஆனால்

(39-ம் பக்கம் பார்க்க)

# தமிழகத் தொழில் வளர்ச்சி

பேராசிரியர். அ. முத்தையா.
(பச்சையப்பன் கல்லூரி, சென்னை.)

வேளாண்மை மிக அத்தியாவசியமான தொழில். ஏனெனில், உணவு வாழ்க்கைக்கு இன்றியமையாததல்லவா? அந்த உணவு கூட போதிய அளவு கிடைக்காத ஒரு நிலை சில ஆண்டுகளாக ஏற்பட்டிருக்கிறது. கடந்த சுமார் 150 ஆண்டுகளாக நம் நாடு தொழில் வளத்தை இழந்து நின்றது; இந் நாட்டு மக்கள் மேலும் மேலும் விவசாயத்தையே நம்பி வாழ்க்கையை நடத்த வேண்டிய ஓர் தாழ்ந்த நிலையை அடைந்தனர். பெரும்பாலான மக்கள் ஈடுபட்டு நிற்கும் தொழிலாக வேளாண்மை இருந்தும் நம் நாட்டிற்குப் போதிய அளவு உணவுப் பொருள் கிடைப்பது அரிதாக இருக்கிறது.

"பசி வந்திடப் பத்தும் பறந்து போம்" என்பது பழமொழி. ஆதலால், எந்த சமூகமும் பசியை யொழிப்பதற்கான அளவு உணவு உற்பத்தி செய்வது மிகவும் அவசியமானது. முதலாவதாக, நம் தமிழகத்தில் மக்களுக்குத் தேவையான அளவு உணவை உற்பத்தி செய்வதற்கான எல்லா நடவடிக்கைகளையும் உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

உணவைப் போல மிகவும் அவசியமான பொருள் உடை. பல நூற்றாண்டுகள் பளபளப்பான பருத்தி ஆடைகளைப் பல் வேறு நாடுகட்கும் அனுப்பி வந்த தமிழகம் உடைக்கு வட நாட்டினை நம்பி நிற்கவேண்டிய நிலை வருந்தத் தக்கது. நம் தமிழ் நாட்டில் இத்தொழிலுக்கு வேண்டிய மூலப் பொருளான பருத்தி நிறைய இருக்கிறது: தொழிலாளிகளும் ஏராளமாக இருக்கின்றனர். துணிகட்கும் முடை அனைவருக்கும் இருக்கிறது. எனவே பஞ்சு ஆலைத் தொழிலை இன்னும் விரைவாகவும் விரிவாகவும் நம் தமிழ் நாட்டில் பெருக்க வேண்டும். கோயம்புத்தூர், மதுரை ஆகிய சில இடங்களில் மட்டுமன்றி, ஏனைய இடங்களிலும் பஞ்சாலை தொழில் பரவ வேண்டும். தமிழ் நாட்டின் துணித் தேவையை இந்நாட்டின் உற்பத்திப் பொருளைக் கொண்டே பூர்த்தி செய்து கொள்ளுவதற்கான ஏற்பாடு செய்வது இன்றே கவனிக்கற்பாலது.

இந்திய நாட்டின் பழம் பகுதியான தமிழ் நாடு சுரங்கப் பொருள் வளம் பெற்றதாக இருத்தல் வேண்டும். நம் நாட்டுப் பகுதியை இன்னும் சரியாக ஆராயாததால், என்ன என்ன கனிவகைகள் பூமியில் புதைந்து கிடக்கின்றன என்று கூறுவதற்கில்லை. பூமியின் நிலைமை ஆரா

யப்படுமானல், தமிழ் நாட்டு மக்கள் பலருக்கு வேலே கிடைக்கும் வழியைக் காட்டுமென்பது உறுதி.

தமிழ் ஜில்லாக்களில் மணிலாக் கொட்டை அமிதமாக பயிரிடப் படுகிறது. அதிற் பெரும் பகுதி வேர்க்கடலேயாகவே வெளி நாடுகட்கு ஏற்றுமதி செய்யப் படுகிறது. அவ்வாறு அனுப்பி விடுவது நாட்டுக்கு வளம் தரும் வகையன்று. மணிலாக் கொட்டையை எண்ணெயாகவும், அவ் வெண்ணே முதலியவைகளால் செய்யக் கூடிய பல வேறு பண்டங்களாகவும் ஆக்கினல் நாட்டின் செல்வம் சிறக்கும்; இந் நாட்டினரின் வாழ்க்கைத் தரம் உயரும்.

தோல் பதனிடும் தொழில் தமிழ் நாட்டில் மிகப் பெரிய தோர் தொழிலாக இருக்கிறது. தோலேப் பதனிட்டு, தோலாகவே வெளி நாட்டிற்கு முழுவதையும் அனுப்பாமல் தோலாற் செய்யப்படும் பல வகைப் பொருள்களேயும் இங் கேயே உற்பத்தி செய்வோமானல், அநேக மக்கள் வாழ்க் கையில் நலம் பெறமுடியும்.

திருச்சிராப்பள்ளி முதலிய சில ஜில்லாக்களில் சிமிண்ட் உற்பத்தி செய்வதற்கான மூலப் பொருள் முதலிய வசதிகள் உண்டு. அவைகளே நன்ருகப் பரிசீலனேசெய்து அத்தொழிலேப் பெருக்க வேண்டும்.

தமிழ் நாடு பித்தளே வெண்கலச் சாமான்களுக்குப் பெயர் போனது. கும்பகோணம், மதுரை முதலிய இடங்களில் இன்றைக்கும் அத்தொழில் நடந்து வருகிறது. கூட்டுறவு முறை முதலிய புதிய வழிகளேக் கையாண்டு அத்தொழில் இன் றும் பெரிய அளவில் நடை பெறுமாறு செய்வது எளிதில் ஆகக் கூடிய காரியமாகும்.

சில காலமாகக் கிராமங்களில் பல ஆண்டுகளாக இருந்த பல வகை மரங்களேயும் வெட்டிப் பயன் படுத்தி விட்டனர். ஆனல் வெட்டிய அம் மரங்களுக்குப் பதில் வேறு மரங்களே வைத்து வளர்க்காது வாளா வீண் பொழுது போக்குகின்றனர். கிராமங்களிலெல்லாம் பலன் தரும் மரங்களே ஏராளமாகப் பயிர் செய்தல் வேண்டும். ஏனெனில், மரங்கள் நாட்டு வளப்பத்தை நானவகை களிலும் பெருக்கும் என்பது பலருக்குத் தெரியாத ஒரு விஷயம்.

தமிழ் நாட்டிலே ஏராளமான ஆடு மாடுகள் இருக்கின்றன. அவற்றின் எண்ணின் பெருக்கம் இருக்கிற அவ்வளவு அவற் றின் பயன் இல்லே. நம்மவர் ஆடு மாடு வளர்க்கும் தொழி லில் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டும். நம் இந்திய நாட்டிலேயே நமது பகுதியில் தான் சராசரி மிகக் குறைவான பால் அருந்தப்படுகிறது. அதற் குக் காரணம் நம் ஆடு மாடுகள் வளப்பம் குறைவாக இருப்ப துவே. ஆட்டுமாட்டுப் பண்ணேத் தொழில் செவ்வையாக நடத் தப் பட்டால் தமிழருடைய வாழ்க்கைத் தரம் இன்னும் உய ரும் என்பதில் எவ்வகை ஐய மும் இல்லே.

நம் தமிழ் நாட்டில் விவசாயமும் இன்னும் நன்றாக விருத்தி செய்யப் படல் வேண்டும். ஆனால், அதுமட்டும் போதாது. ஒரு நாட்டில் விவசாயம் எவ்வளவு உன்னத நிலையில் இருந்தாலும் அந்நாட்டு மக்களில் ஒரு பகுதியினருக்குத்தான் அது பிழைப்புக்கு வழியைத் தரும். ஆதலால், எல்லோரும் நன்றாக வாழ வேண்டுமானால், எல்லாத் தொழில்களும் வளர்க்கப்படல் வேண்டும்.

தொழில்களுக்கான இயற்கை வளம் முதலிய வசதிகள் பல இருந்தும், இவ்விந்திய நாட்டில் மற்ற மாகாணங்களை விட மிகப் பிற்போக்கான நிலையில்தான் நமது மாகாணம் இருக்கிறது. அதிலும், நம் தமிழ் மாகாணப் பகுதி மிக மிகத் தாழ்ந்து நிற்கிறது. இந் நிலையை மாற்ற வேண்டும். மாற்றினால் தான் நமக்கு வாழ்வு உண்டு. இல்லையேல், நித்திய தரித்திரம்தான் நம்முடன் தோழமை பூண்டு நிற்கும்.

நம் தமிழ் நாட்டு முதலாளிகள், நாட்டின் வளத்தைப் பெருக்க, புதுப் புதுத் தொழில்களைத் தொடங்க வேண்டும். தொழிலாளிகள் உண்மையான உழைப்பைத் தர வேண்டும். தொழில் வளர்ச்சிக்குப் பொது மக்களும் பக்க பலமாக இருக்க வேண்டும். அரசாங்கம் எல்லா வகையாலும் உதவ வேண்டும். தமிழ் நாட்டு மக்கள் அனைவரும் ஒருமுகமாக நின்று, ஒரே லட்சியத்தைக் கொண்டு, தொழிற் பெருக்கத்தின் மூலம் பொருள் வளஞ் செழிக்கச் செய்தால் தான் தமிழர் அனைவரும் தரித்திரத்தை வெருட்டி அடித்து தன்மான முள்ளவர்களாய் நல் வாழ்வு வாழ முடியும்.

**"உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ"**

---

## கண்ணகி-மணிமேகலை

'தமிழ் முரசு' ஆசிரியர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் மனைவியார் திருமதி ராஜேசுவரி அம்மையார் கடந்த ஏப்ரல் 5-ந் தேதி பெண் மகவைப் பெற்றார். அம்மகவுக்கு **கண்ணகி** எனப் பெயரிடப்பட்டது.

ம. பொ. சியின் சகோதரர் ம. பொ. பரசுராமன் அவர்களின் குழந்தைக்கு **மணிமேகலை** எனவும் பெயரிடப்பட்டது.

---

(36-ம் பக்கத் தொடர்ச்சி)
தற்கொலையோ மன வேதனையோ எதிரேவந்து நிற்காதவாறு காப்பாற்ற வேண்டிய பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. என் கருத்தில் எந்தப் பகுதி யாவது தெளிவில்லாமல் இருந்தால் அதைக் குறித்து எழுது; தெளிவுபடுத்துவேன். நீ எவ்வளவு உண்மையாக உணர்கிறாயோ, அவ்வளவு உண்மையாகவே நானும் உணர்கிறேன். ஆகவே, இந்தத் தமிழகத்தில் நாம் இருவராவது ஒன்றுபட முடியாதா, பார்ப்போம்.

உன் அன்புள்ள

**"வளவன்"**

# தமிழால் ஒன்றுபடுவோம்

தென்னாட்டிலுள்ள மக்களுள் ஆரியர் இன்னார், திராவிடர் இன்னார் எனப் பகுத்துக் கூறல் எவரால் இயலும்? ஆரியர் தென்னாடு போந்த காலம், ஐயாயிரம் ஆண்டுகளுக்கு மேற் கடந்து நிற்பதென்று சரித்திரஞ் சொல்லுகிறது. ஐயாயிரம் ஆண்டுகளாக ஈங்கு நிலைத்து வாழ்ந்து வரும் மக்களாகிய ஆரியர்க்கும், இந்நாட்டுப் பழங் குடிகளாகிய திராவிடர்க்கும் கலப்பு நிகழாதிருக்க முடியுங் கொல்! சில நூற்றாண்டுகளுக்கு முன்னர் நமது நாடு போந்த ஐரோப்பியர்க்கும், நம் நாட்டார்க்கும் கலப்பு நேர்ந்தது. அதன் பயனாக ஒரு தனி வகுப்பும் நமது நாட்டில் தோன்றியிருக்கிறதெனில், பல ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக இந்நாட்டில் நிலைத்து, வழக்க ஒழுக்கங்களிலும், கடவுள் வழிபாட்டிலும், பிறவற்றிலும் ஒன்றுபட்டு வாழும் ஆரியர்—திராவிடருள் கலப்பு ஏற்பட்டிராது என்று எவரால் கூறுதல் கூடும்?

இன்று தம்மைத் தூய ஆரியரெனக் கருதுவோர் உடலில் திராவிடக் குருதியும், அவ்வாறே தம்மைச் சுத்த திராவிடரென எண்ணியிருப்போர் உடலில் ஆரிய இரத்தமும் பாய்ந்து கொண்டிருப்பதை ஊன்றிப் பார்க்க அன்பர்கட்கு நேரம் இல்லை போலும்!

இக்காலத்தில் தமிழ் நாட்டிலுள்ள அனைவரையுந் தமிழரெனச் சொல்வதே சிறப்பு. இந்நாளில் பிராம்மணரை ஆரியரென்றும், பிராம்மணரல்லாதாரைத் திராவிடரென்றும் உரைத்தல் புனைந்துரையே யாகும். இவ்வாறு கூறுவோர், இன்னுஞ் சின்னாள் கடந்தால், இப்பொழுது இந்து மதம் விடுத்துக் கிறிஸ்து மதம் புகுந்துள்ள அன்பர்கள் எருசலேமிலிருந்து போந்தவர்களெனப் புகன்று பிணக்குறுவர் போலும்! தமக்கு அவ்வப்போது கிடைக்கும் அகச் சான்று புறச் சான்றுகளைத் தழுவிச் சரித்திரக்காரர் எழுதும் நூல்களை ஆராய்ச்சிக் குரியனவாகக் கொள்ள வேண்டுமேயன்றி அவற்றை மறை மொழியாகக் கொள்ளலாகாது. இன்று காணப்படும் உண்மை, நாளை மறுக்கப்படுவதைக் கண்டுங் கேட்டும் வருகிறோம். ஆரியர் பிற நாட்டிலிருந்து போந்தவரா, திராவிடர் இந்நாட்டிலேயே தோன்றினவரா என்னும் ஆராய்ச்சி இன்னும் முற்றுப் பெறவில்லை.

முற்றுப் பெறாத ஒன்றை ஆராய்ச்சி அளவில் வைத்துக் கொள்ளுதலே அறிவுடைமை. அவரவர் தத்தம் ஆராய்ச்சியிற் கண்ட சில உண்மைகளைப் போருக்குக் கருவிகளாகக் கொள்ளுதல் அறியாமை. பண்டைநாளில் ஆரியர்க்கும் திராவிடர்க்கும் பெரும் பூசல் நடந்துமிருக்கலாம். அதை இந்நாளில் ஏன் பாராட்டி இடர்

# அடி வானத்து அற்புதங்கள்

—கவியரசர் பாரதியார்

உலகில், எங்கு பார்த்தாலும் நிறைந்து கிடக்கும் அழகுகளைத் தமிழர்கள் கவனிப்பது கிடையாது. சனிக்கிழமை சாயங்காலந் தோறும் குளக்கரைகளில் போய்க் கருடன் பார்ப்பதற் கென்ருல், நம்மவர்கள் கூட்டம் கூட்டமாக ஓடுகிருர்கள். கதிரவன் மறையும் நேரத்தில் வானத்திலே தோன்றும் அதிசயங்களைப் பார்க்க ஒருவன் கூடப் போகிறதில்லை. அப்போது வானத்திலே இந்திர சால மகேந்திர சாலங்களெல்லாம் நடக்கின்றன. இந்தக் கணமிருந்த தோற்றம் அடுத்த கணம் இருப்பதில்லை. உலகத்திலுள்ள பொருள் முழுவதையும் செலவிட்டு வர்ணக் காட்சிகள் ஏற்படுத்திப் பார்ப்போமானாலும், அது கதிரவன் மறையும் நேரத்தில் வானத்திலே நாம் பொருட் செலவில்லாமல் பார்க்கக் கூடிய காட்சிகளிலே கோடியிலொரு பங்கு கூடக் காணுது.

வாண வேடிக்கைகளுக்காக ஒரு செல்வன் பதிணுயிரக் கணக்கில் பொருள் செலவிடுகிருன். அவனது செல்வத்திணலன்றோ இந்தக் காட்சியை எளிதில் காணமுடிகிறதென்று அதைப் பார்த்து ஆயிரம் ஏழைகள் பெருமூச் செறிகிருர்கள்.

சகோதரா! கதிரவன் மறையும்போது ண்டாகும் வேடிக்கைகளைப்பார். கதிரவனைப் பார்த்தால் கண்ணுக்குக் கெடுதி என்ற குருடர் நம்பிக்கையைப் பொருட்படுத்தாதே. கதிரவனைப் பார்ப்பது பாவமென்று சொல்லும் மூடர் சாத்திரத்தைக் கண்டுகொண்டும் பார்க்காதே!

நமது நாட்டில் வேதகாலத்து ரிஷிகள் இயற்கையின் அழகைக் கண்டு மோகித்துப் பரமானந்த மெய்தியவர்களாய்ப் பல

---

படல் வேண்டும்? ஒரு நாட்டு மக்களாய் அந்நாட்டின் நலன் தீங்கிற்குரியராய் வாழ்வோர் தமக்குள் சில போலிக் காரணங்களால் பிணங்குவது நாட்டைச் சிறுமைப்படுத்துவதாகும். அன்பிற் சிறந்த அறிஞர்கள் இத்தகைப் பிணக்குகள் எழாதவாறு காத்துவரல் வேண்டும்.

தமிழ் நாட்டிற் பிறந்து, தமிழ் நாட்டில் வளர்ந்து தமிழ் நாட்டை தாய்நாடாகக்கொண்ட எல்லாரும் பெரிதும் தமிழே பேசுகின்றனர் பிறநாட்டினின்றுந் தமிழ் நாட்டில் குடிபுகுந்தோர்சிலரே. அவருந்தமிழகத் தாயகமாகக் கொண்டிருந்தல் கண்கூடு. இவ்வணே வரும் தமிழ் என்னும் அமிழ்தை நாடோறும் வாழ்வில் பருகுஞ் சகோதரரே யாவர். இவர் தமக்குள் ஒருமை காட்டுந் தமிழ் மொழியிற் பற்றுக் கொண்டு உழைப்பாராயின் தமிழ் நாட்டில் ஒருமைப்பாடு நிகழும் என்பது திண்ணம்.

(திரு. வி. கவின் தமிழ்த் தென்றல் என்ற நூலிலிருந்து)

வேடிக்கையான பாடல்கள் பாடியிருக்கிறார்கள். இயற்கை அழகைக்கண்டு பரவசமெய்திக் காளிதாசன் முதலிய பெருங் கவிகள் அற்புதக் கவிதைகள் செய்திருக்கின்றனர்.

இக்காலத்திலே தான் இந்தத் துரதிஷ்ட நிலை கொண்ட நாட்டில் வானம் பார்த்தறியாத குருடர்களெள்லோரும் கவிகளென்று சொல்லி வெளி வருகிறார்கள்.

கதிரவன் மறையும் போதுண்டாகும் அற்புதப் பேரழகை எழுதிப் பிறர் மனதில் படும்படிச் செய்வது சாத்திய மில்லை. நேரிலே கொண்டு காட்டினாலும் பலருக்கு ஆரம்பத்திலே கண் கூசுவதுதான் அர்த்தமாகுமே யல்லாமல், விஷயம் தெரியாது.

சகோதரா! நீயாகவே போய்ப் பலதினம் அடுத்துப் பார்க்க வேண்டும். பிறகுதான் உனக்கு அந்த தெய்வக் காட்சி சிறிது சிறிதாக விளங்கும். கதிரவன் தோன்றும் போதும், மறையும் போதும் வானத்தில் நடக்கும் இந்திர ஜாலக்காட்சியில் ஒவ்வொரு கணந்தோறும் புதிய புதிய வேடிக்கைகள் மாத்திரமே யன்றி இன்னுமொரு விசேஷமுண்டு. நேற்று இருந்தாற் போல இன்றைக்கு இராது. இன்று இருப்பதுபோல நாளை இராது. தினந்தோறும் வெவ்வேறு வியப்புகள் வெவ்வேறு உலகங்கள்; வெவ்வேறு மகிமைகள்; வெவ்வேறு கனவுகள்; வெவ்வேறு ஆனந்தங்கள். ஓர் மாலைப் பொழுதில் நான் கண்ட அதிசயங்களை ஒருவாறு இங்கு குறிப்பிடுகின்றேன். அடிவானத்தில் சூரிய கோளம் தகதகவென்று சுழன்றுகொண்டிருந்தது. இருபது கோடி மின்னல்களை எடுத்து ஒரு சக்கரமாக வார்த்துச் சுற்றுவதுபோலிருந்தது. துவக்கத்திலேதான் கண்கூசும். சிறிது நேரம் உற்று நோக்கிக் கொண்டிருந்தால், பிறகு கண்கூச்சம் தீர்ந்து போய் விடும். இரண்டு வட்டத் தகடுகள் ஒன்றின்மேலொன்று சுழலும். கீழே இருப்பது சுத்தமான மின்வட்டம்; மேலே மரகத வட்டம்; பச்சை வர்ணம்! அற்புதப்பசுமை! பச்சைத் தகடு தன்புறத்தி லிருக்கும் மின் தகட்டை முழுதும் மறைத்துக் கொண்டிருக்கும். ஆயினும், இடையிடையே பின்னுள்ள வட்டத்தின் வயிரக் கிரணங்கள் கண் மீது பாயும்.

பார்! கதிரவனைச் சுற்றி மேகங்களெல்லாம் தீப்பட்டெரிவது போலத் தோன்றுகிறது! ஆகா, என்ன வர்ணங்கள்; எத்தனை வித வடிவங்கள்! எத்தனை ஆயிர விதமான கலப்புகள்! நெருப்புக் குழம்பு! தங்கம் காய்ச்சி விட்ட ஓடைகள்! எரிகின்ற தங்கத் தீவுகள்!

நீல எரிகள்! கரும் பூதங்கள்! எத்தனை வகை நீலம்! எத்தனை விதச் செம்மை! எத்தனை வகைப் பசுமை! எத்தனைவகைக் கருமை நீல ஏரியின் மீது மிதக்கும் தங்கத் தோணிகள் எரிகின்ற தங்கச் சரிகை போட்ட கரிய சிகரங்கள்! தங்கத் திமிங்கிலங்கள் மிதக்கும் கருங் கடல்! எங்கும் ஒளித்திரள்! வர்ணக் களஞ்சியம்! போ, போ; என்னால் அதை வர்ணிக்க முடியாது.

# உண்மை ஒளி வேண்டும்

—வல்லிக்கண்ணன்

"அரசியல் அமைப்பின் மீது, சட்டங்களின் பேரில், நியாய ஸ்தலங்களிடம் நாம் அளவுக்கு அதிகமான நம்பிக்கை வைத்து விட்டோமோ என்ற வியப்பு எனக்கு அடிக்கடி எழுவது உண்டு. உண்மையில், இவை மாயையான நம்பிக்கைகளே. மக்களின் உள்ளத்திலே உறைவது சுதந்திர உணர்வு. அங்கே அவ்வுணர்வு மக்கி மடிந்து போனால், எந்த அரசியலமைப்பும், எந்தச் சட்டமும், எந்தக் கோர்ட்டும் அதைப் போற்றி உயிரளிக்க முடியாது. ஆண் பெண்களின் உள்ளத்திலே சுதந்திர உணர்வு கனன்று கொண்டிருந்தால், புறவுலகிலே சுதந்திரத்தைத் தேடிப் பாது காக்க வேறு உதவிகள் தேவை யிரா.

"மக்களின் உள்ளத்திலே மிளிர வேண்டிய இந்த சுதந்திர உணர்வுதான் என்ன? முரட்டுத் தனமான, கட்டுப் பாடற்ற போக்கு அல்ல அது. ஒவ்வொரு வரும் தனது இஷ்டம் போல் செயல் புரிய விரும்புகிற ஒரு தாராளத்தனமு மல்ல. இத்தகைய உணர்ச்சி சுதந்திரத்தின் எதிர்மறையே யாகும். முற் போக்கைக் கெடுத்து, சுதந்திரத் தைக் குழி தோண்டிப் புதைக்க உதவுகிற பண்பே யாகும். தங்களது உரிமைகளுக்கு அவசிய மான கட்டுப்பாடுகளை விதித்துக் கொள்ள விரும்பாத மனிதர்கள் நிறைந்த சமுதாயம் எதுவாயி னும் சரி, அது விரைவிலேயே ஒரு சில வெறியர்களுக்குப் பூர்ண உரிமை கிடைத்து விடத் துணை புரிகிற சமூகமாக வளர்ந்து விடும்.

"ஆகவே, சுதந்திரக் கனல் என்பதுதான் என்ன என்ற கேள்வி எழுகிறது. மற்ற மனி தர்களின்—எல்லா ஆண் பெண் களின்—மனோபாவத்தையும் புரிந்து கொள்ளத் துடிக்கிற பண்புதான் சுதந்திரத்தின் ஜீவன் என்று சொல்வேன். விருப்பு வெறுப்புகளற்று, தனது நலத்துடன், பிறரது நலன்களையும் முக்கியமாக மதிக் கத் தூண்டுகிற குணமே சுதந் திரத்தின் உயிர்க் கனல் என்று சொல்வேன். சின்னஞ்சிறு சிட் டுக் குருவிகூட கவனிப்பாரற்று அநியாய் மண்ணிலே விழுந்து மடியக் கூடாது என்ற விழிப் புணர்ச்சியை மக்களுக்கு அளிக் கிற தன்மையே உண்மையான சுதந்திரத்தின் சுடர் என்று சொல்வேன்."

அமெரிக்கச் சிந்தனையாளர்—'யு. எஸ். சர்க்யூட் கோர்ட் ஆவ் அப்பீல்ஸ்' நீதிபதி—ஒருவர் கூறி யுள்ள கருத்துக்கள் இவை.

சிந்திக்கிறவர்கள் பாராட்டு வார்கள், இவை நேர்மையான கருத்துகள் என்று. ஒவ்வொரு மனிதனும்-ஆணும் பெண்ணும் —தனக்குச் செய்ய வேண்டிய சேவைகள் உண்டு. தான் ஒரு அங்கமாகத் திகழ்கிற தனது குடும்பத்திற்கு ஆற்ற வேண்

டிய பொறுப்புகள் பல உண்டு. சமுதாயத்திற்கும், அதன் மூலம் நாட்டுக்கும் செய்ய வேண்டிய கடமைகளும் உண்டு.

மனிதன் தனித்து வாழ்கிற பிராணி அல்ல. மற்றக் கடமைகளை மறந்து சுயநலத்தையே பெரிது படுத்துகிறபோது மனிதன் மனுஷத் தன்மையை இழந்து விடுகிருன். ஒவ்வொருவரும் சுயதேவைகளைப் பூர்த்தி செய்தாக வேண்டியது தான். ஆயினும் குடும்பம், சமுதாயம், தேசம் என்ற பிணைப்புகளில் அவன் கட்டுப் பட்டிருப்பதால் அவ்வப்போது அன்ருட வாழ்வில் கட்டுப்பாடுகளும் சட்ட திட்டங்களும் அவசியமாகின்றன. மனிதநலனைப் பாதிக்காத, பிறருக்குத் தீமை பயக்காத உரிமைகளை வழங்கக் கூடிய ஓரளவு சுதந்திரம்தான் கிட்டும் சமூக அங்கத்தினனை மனிதனுக்கு. ஒவ்வொருவனும் தனது இஷ்டம் போல் எண்ணுவதும் பேசுவதும் எழுதுவதும் செயல் புரிவதும் என்ற நியதியை அனுஷ்டிப்பதானல், முரண்பாடுகளும் குழப்பமும் தான் ஏற்படும். வாழ்வில் திட்டமான போக்கும் அமைதியும் இராது.

சுதந்திரக் கனல் ஜொலித்து ஒளி பரவ வேண்டுமானல், தன்னலத்தை அகற்றி அன்பு கொண்டு, பொது நலத்திற்காக விட்டுக் கொடுக்கும் தாராள மனேபாவம் வேண்டும். முக்கியமாக, மனிதத் தன்மை வேண்டும்.

நமது நாடு சுதந்தரமடைந்திருக்கிறது; 'எல்லோரும் இந் நாட்டு மன்னர்' ஆகிவிட்டோம்; இஷ்டம் போல் வாழ்வோம் என்று எண்ணி சுயநலத்தால், பேராசையால், சுரண்டும் ஆர்வத்தால் ஒருசிலர் செயல் புரியத் தொடங்கினுலும் நாட்டு நிலைமையே சீர்கேடடைய நேர்கிறது. கறுப்புச் சந்தை பெருத்து வருவதேன்? பணப் பசி எடுத்த ஒரு சிலர் நாட்டு நிலைமைகளை சுய நலத்துக்காகப் பயன் படுத்தத் துணிந்ததுதான். மக்கள் படும் கஷ்டத்தைக் கண்டும் மனமிரங்காமல், அன்பு வரண்ட நெஞ்சினராய், மானுஷிகம் மறைந்த பண்பினராய், கொள்ளை லாபமடிக்கத் துணிகிருர்கள். இவர்களை 'மக்கட் பதடிகள்' என்றுதான் கூற வேண்டும்.

சுதந்திரம் ஒளி பெற்றுப் பிரகாசிப்பது ஆளவந்தார்களின் செயல் திறனையும், சிந்தனைத் திறம், திட்டம், பொறுப்பு முதலியவைகளையும் மாத்திரம் பொறுத்ததன்று. மக்களின பண்பையும் பொறுத்ததே. ஜனநாயகத்தின் வெற்றிக்கு ஒவ்வொரு பிரஜையும் காரணஸ்தன் தான். மற்றவர்களைக் குற்றம் கூறிக் கொண்டு, தனது போக்கை, தனது செயலை, தன் சூழ்நிலையைத் திருத்தாமலிருக்கிறவர்கள் அதிகமாகும் போது சமுதாய நிலையும், நாட்டு நிலையும் அபிவிருத்தி அடைய வசதியில்லாமல் போகிறது.

ஆள்கிறவர்கள் சட்டம் செய்து விடுவதனல் மட்டும் எதுவும் வெற்றி பெற்று விடாது. கடுமையாக அமுல் நடத்துவதனுலும் ஆகாது. மக்களின் மன

திலே, உளப்பண்பிலே, மாற்றம் தேவை. மது விலக்கு சட்டபூர்வமாக வாழ்கிறது. குடிப்பது குற்றம் என்கிறது சட்டம். குடிப்பது பாபம் என்கிறது தர்மோபதேசம். ஆயினும் குடிப்பது—கள்ளத்தனமாகக் குடிப்பது, திருட்டுச் சாராயம் காய்ச்சுவது—நன்ருக நடைபெறுகிறது.

தீண்டாமை பேசக்கூடாது; கோயிலுக்குள் எவரும் போகலாம் என்கிறது சட்டம். அப்படிப் போக விடாமல் யாரையாவது எவரேனும் தடுத்தால் வண்டனை உண்டு என்கிறது ஆக்கினை. சரிதான்; வாழ்க்கையிலே, சமுதாயத்திலே, நாட்டிலே அடியோடு மாறுதல் பிறந்து விட்டதா? இல்லையே! ஏன்? என்ன காரணம்?

இன்றும் கிராமங்களில் மட்டுமல்ல, நகரங்களில் ஒருசில பகுதிகளில் கூட, தீண்டாமையும் ஒதுக்கி வைத்தலும், அதற்குரிய சாத்திரம் பேசுதலும் வாழத்தான் செய்கின்றன. இதே பழக்கம் சிறுவர் சிறுமியர்களுக்கும் கூடக் கற்பிக்கப்படுகின்றன. அப்புறம் எப்படி மாறுதல் ஏற்படும்?

வெறும் சட்டத்தினால் மட்டும் பயனில்லை. மக்களின் ஒத்துழைப்பு வேண்டும். அதற்கு மக்கள் உண்மையை உணரக்கூடிய, சிந்தித்து அறியக்கூடிய பக்குவம் பெற வேண்டும். உள்ளத்தில் ஒளி உண்டாவதற்கு, அறிவிலே தெளிவு வேண்டும். கல்வி ஞானம் தேவை. மனதில் அன்பும் மனிதப் பண்பும தேவை. அத்தகைய மனப்பண்பும் குண நிறைவும் பெரும்பாலோரிடத்திலே மிளிர்கிறபோது தான் குடும்ப நிலையும், சுற்றுப்புறமும், சமுதாய நிலையும், நாட்டு நலனும் நன்கு பிரகாசிக்கும். வாழ்க்கை வளமுள்ளதாகும். அப்போதுதான் சுதந்திரச் சுடரில் தனியொளி தெறிக்கும்.

நம் நாடு சுதந்திரம் அடைந்திருப்பது உண்மை. சுதந்திரப் பொன்னொளி எங்கும் பரவுவதற்கு நம் நாட்டு மக்கள் இன்னும் எவ்வளவோ கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது என்பதும் உண்மைதான்.

---



---

## அட்டைப்பட விளக்கம்

‚முரசு' அட்டைப் பக்கத்தை அலங்கரிப்பது தமிழக நிலப்படமாகும். இப்படம், கடந்த ஜனவரி திங்களில் குமரி முனையில் நடைபெற்ற எல்லை மாநாட்டின் போது திறந்து வைக்கப்பட்டது. மின்சாரபித்தானை அழுத்திய உடனே தமிழகம் சென்னை மாகாணத்திலிருந்து பிரிந்து நிற்பதை பட்டத்தில் காணலாம். -ஆசிரியர்.

# தென்னிந்திய நாடுகளின் அமைப்பு

பிரெஞ்சுத் தமிழகம் உள்ளிட்ட தென்னிந்தியாவை மொழி வாரி நாடுகளாகப் பிரித்தால், ஒவ்வொரு நாட்டின் நிலப் பரப்பும் மக்கள் தொகையும் 1941-ம் ஆண்டுக் கணக்குப்படி பின்வருமாறு:—

| பிரதேசங்கள் | நிலப்பரப்பு | மக்கள்தொகை |
|---|---|---|
| **புதிய தமிழகம்** | | |
| சென்னைமாநில தமிழ் ஜில்லாக்கள் | 50491 | 25542913 |
| சித்தூர் ஜில்லா தமிழ்ப் பகுதிகள் | 4213 | 1132000 |
| திருவிதாங்கூர் தமிழ்ப் பகுதிகள் | 2000 | 1200000 |
| பிரெஞ்சுத் தமிழகம் | 166 | 265208 |
| மொத்தம்— | 56870 | 28140121 |
| **விசால ஆந்திரம்** | | |
| சென்னை மாநில ஆந்திர ஜில்லாக்கள் | 76503 | 23159714 |
| சித்தூர் ஜில்லா ஆந்திரப் பகுதிகள் | 1688 | 500395 |
| ஒரிசாவிலுள்ள கஞ்சம் ஜில்லா | 7688 | 1412600 |
| ஐதராபாத்திலுள்ள தெலிங்கானா | 41086 | 8566200 |
| பங்கனபள்ளி, சாந்தூர் | 417 | 60406 |
| மொத்தம்— | 127382 | 33699315 |
| **ஐக்கிய கன்னடம்** | | |
| சென்னை கன்னடமாநில பிரதேசம் | 9759 | 2574751 |
| பம்பாய் கன்னட ஜில்லாக்கள் | 18768 | 3843583 |
| மைசூர் | 29458 | 7329140 |
| ஐதராபாத் கன்னடப் பகுதி | 7000 | 1200000 |
| குடகு | 1593 | 163000 |
| டெக்கான் சமஸ்தானங்கள் | 5530 | 1466910 |
| மொத்தம்— | 72108 | 16577384 |
| **ஐக்கிய கேரளம்** | | |
| கேரள யூனியன் (தமிழ்பகுதி நீக்கி) | 7100 | 7300000 |
| மலபார் ஜில்லா | 5795 | 4229425 |
| மாஹி (பிரெஞ்சுப் பிரதேசம்) | 25 | 20000 |
| லட்சத் தீவுகள் | 13 | 4082 |
| மொத்தம்— | 12933 | 11553507 |

# செய்தியும் - - சிந்தனையும்

கம்யூனிஸ்ட் சீனாவிலுள்ள வெளிநாட்டு வணிகர்கள், இனி கணக்கு முதலியவற்றை சீன மொழியிலேயே எழுத வேண்டும் என்று செஞ்சீன அரசாங்கம் ஆணையிட்டுள்ளதாக பத்திரி செய்தியொன்று கூறுகிறது.

தமிழ் நாட்டிலோ, மாகாண ஆட்சிக்கு ஆங்கிலம், மத்திய ஆட்சிக்கு இந்தி என்பது நிச்சயமாகிவிட்டது. மார்வாடிக் கணக்கு குஜராத்தியில், மதச் சடங்குகள் சமஸ்கிருதத்தில் என்பதும் மறுக்க முடியாத உண்மைகள். இந்தலட்சணத்தில் தனக்கும் முழு சுதந்தரம் கிடைத்து விட்டதாக நம்புகின்ற தமிழனை சிந்திக்கத் தூண்டுகிறது சீனத்துச் செய்தி.

●

குமரியை மீட்கப் பாடுபடும் திருவிதாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் பதவியிலிருந்து விலகிக் கொள்வதாகவும், காங்கிரசுக்குள் ஏற்பட்டுள்ள பிளவே விலகுவதற்குக் காரணம் என்றும் திரு. நத்தானியல் பத்திரிகைகளுக்கு அறிக்கை விடுத்துள்ளார்

திரு. நத்தானியல் விலகுவதால் தி. த. காங்கிரஸ் ஒருக்கால் செயலற்று விட்டாலும் குமரிமுனைப்போரை நடத்தும் பொறுப்பை தமிழரசுக்கழகத்தார் ஏற்றுக்கொள்ளாதிருக்க மலையாள மாந்திரீகர்கள் சக்தி தேவிக்கு பூஜை போடலாம்.

இலங்கையிலுள்ள ஏழு லட்சம் தமிழர்களில் 1232 பேருக்குத்தான் இலங்கை அரசாங்கம் குடி உரிமை தந்திருப்பதாக பிரதமர் நேரு பார்லிமெண்டில் பிரலாபித்திருக்கிறார்.

டில்லி அரசாங்கத்தின் 'கும்பகர்ண உறக்கமே 698768 தமிழர்கள் லங்கையில் நாடோடிகளாக அலையக் காரண மல்லவா? என்ற கேள்விக்குப் பார்லிமெண்டின் அடுத்தகூட்டத்தில் பண்டித நேரு பதிலளிகக நேரலாம்,

●

உத்தர பிரதேசம் (கண்ணகிக்கு கல் சுமந்த கனக விசயனின் நாடு) சென்னை மாகாணத்திற்கு அரிசி விற்பதில் அநியாய விலை வைப்பதன் காரணமாக 4000 டன் அரிசிக்கு 1 கோடி 8 லட்சம் ரூபாய் அதிகப்படியாகக் கொள்ளை யடித்த தென்றும், இம்முறையில் சென்னையின் பற்றாக்குறை முழுவதற்கும். உ. பி. யில் அரிசி வாங்கினால் ஆண்டுக்கு 11 கோடி ரூபாய் கொள்ளை கொடுக்க நேருமென்றும் சென்னை அரசாங்கம் குமுறுகின்றது.

பாரத யுத்த காலத்தில் பாண்டவர் படைக்கும் கௌரவர் படைக்கும் பணம் வாங்காது சோறு போட்ட தமிழ் நாட்டில் பஞ்ச மென்றால், சந்தர்ப்பத்தைப் பன்யபடுத்தி கொள்ளை யடிக்கிறது குருக்ஷேத்திரபூமி! ஒருவேளை இந் மொழிக்கும் விலை போட்டு அதை அரிசி கணக்கில் எழுதி வசூலிக்கிறார்கள் போலும்!

———

## மதிப்புரை

**அமெரிக்காவைப் பார்:** ஆசிரியர் சோம. லெ. இலக்குமணச் செட்டியார்; வெளியிட்டோர்: இன்ப நிலையம், மயிலாப்பூர் சென்னை; பக்கங்கள் 192. விலை ரூபாய் 2-12-0.

இந்நூலாசிரியர் அமெரிக்காவுக்கு நேரில் சென்று அங்கு பல வாரங்கள் தங்கியிருந்து தாம் கண்டவற்றையும் — கேட்டவற்றையும் இந்நூலில் தொகுத்துக் கூறியுள்ளார். இந்நூலைப் படிப்பவர்கட்கு தாமே அமெரிக்காவில் பிரயாணம் செய்வது போன்ற உணர்ச்சி தோன்றும்படி திறம்பட எழுதியுள்ளார். நூலைப் படித்து முடித்தவுடன் அமெரிக்காவைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டியவற்றை பெரும்பாலும்தெரிந் கொண்டோம் என்று திருப்திப் பட முடி.கிறது.

நூலாசிரியர், பல்வேறு இடங்களில் அமெரிக்காவோடு இந்தியாவையும் ஒப்பிட்டு இரு நாடுகளுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கிச் செல்கிருர். இதனல், அமெரிக்காவிடமிருந்து இந்தியா கற்றுக் கொள்ள வேண்டியவை என்னென்ன, இந்தியாவிட மிருந்து அமெரிக்கா தெரிந்து கொள்ள வேண்டியவை என்னென்ன என்பவற்றைப் புலனக்குகிருர். வெறும்புள்ளிவிபரங்களைக் கூறுமிடத்தில் கூட, அலுப்புத்தட்டாமல் படிக்கும் வகையில் சுவைபட எழுதியுள்ளார்.

இந்நூலில், அமெரிக்காவில் தாம் கண்ட காட்சிகளில் சிலவற்றைப் பற்றிய படங்களையும் சேர்த்திருப்பது பாராட்டுதற்குரியது. தமிழ் நடை நன்ருக அமைந்துள்ளது. வெறும் படிப்பதற்காக மட்டுமல்லாமல் தமிழ் மக்கள் பயனடைய வேண்டும் என்ற நல்லெண்ணத்துடனேயே ஆசிரியர் இந்நூலை இயற்றியிருக்கிருர் எனத் துணிந்து கூறலாம்.

இந்நூலின் கட்டட அமைப்பு நன்ருக இருக்கிறது. இன்ப நிலையத்தாரின் பதிப்பு என்ருல் அழகுக்குகேட்கவா வேண்டும்.

**அமைச்சர் யார்?:** ஆசிரியர்; சி. இலக்குவனர். வெளியிட்டோர்: இலக்கியப் பண்ணை, விருதுநகர். பக்கங்கள் 93. விலை ரூபாய் 1-0-0.

திருக்குறளில், அமைச்சியல் பற்றிய குறள்களுக்கு விளக்கம் கூறுவதே இந்நூல் இயற்றியவரின் குறிக்கோள். அமைச்சியலில் வள்ளுவர்கூறும் அரசியல் நுட்பங்களை விளக்க விரும்பிய ஆசிரியர் ஆளும் கட்சியான காங்கிரசைக் குறை கூறுவதிலேயே பெரிதும் கவனம் செலுத்தி யிருக்கிருர். இதனல், பல்வேறு இடங்களில் குறட் பாக்களுக்கு வலிந்து பொருள் கூகூறுகிருர். ஆனல், கூற விரும்பியவற்றைதெளிவாகவும் திறமையாகவும் கூறுகிருர்.

**சுதந்திரப் போர் வீரர்கள்.:** ஆசிரியர்: டி. எஸ். நரசிம்மாச்சாரியார் வெளியிட்டோர், சரசுவதி பிரசுராலயம், தாருவல்லம்; பக்கங்கள் 28. விலை 0-4-0.

